# செந்தமிழ்ச் செல்வி



சிலம்பு-௫௯   தி. வ. ஆண்டு-௨௦௧௬   ஆனி   பரல்-௧௧

சூலை 1985

# “செந்தமிழ்ச் செல்வி”

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)




---

# உள்ளுறை

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-ருகூ திருவள்ளுவர் ஆண்டு உ0கசு, ஆனி பரல்-கக
தி. வ. ஆண்டு உ0கசு, ஆனி பரல்-கக

ஜூலை 1985



# ஈழத்தமிழர்: அரசியல் தீர்வு

தம் குருதியை வியர்வையாகச் சிந்தி இலங்கை மண்ணை வளப்படுத்தியவர் தமிழ்ப் பெருங் குடிமக்கள். இது வரலாறு கூறும் உண்மை. எனவேதான் இலங்கையில் தமிழர் தாம் வாழும் பகுதியில் சிங்களவர் மேலாண்மையின்றி உரிமையோடு வாழ விழைந்தனர். அதற்காகப் பல்லாண்டுகளாக அரசியல் அடிப் படையில்-மக்களாட்சி முறையில் போராடி வந்தனர்.

தமிழரின் இந்த உரிமை உணர்வை மதித்து, முன்னர் இருந்த ஆட்சி ஓரளவு அவர்களை உரிமையோடு வாழ வழிவிட்டு வந்தது. அப்போதெல்லாம் அந்நாட்டுத் தமிழருக்குத் தமிழ் ஈழம் பெற்றுத் தான் தீர வேண்டும் என்ற எண்ணம் தோன்றவில்லை.

அடுத்து ஆட்சிப்பீடம் ஏறிய செயவர்த்தனே எவ்வெவ் வழிகளிலெல்லாம் தமிழரின் உரிமைகளைப் பறிக்க வேண்டுமோ அவ்வவ் வழிகளிலெல்லாம் அவர்தம் உரிமைகளைப் பறித்து, அவர்களை இரண்டாந்தரக் குடிமக்களாக்கியதோடு, பல கொடுமைகளையும் இழைக்கத் துவங்கினார்.

அதன் பிறகே, அங்குள்ள, தன்மானமும் விடுதலை உணர்வு முடைய இளைஞர்கள் இனி, ''மயிலே மயிலே இறகு போடு என்றால் மயில் இறகு போடாது'' என்னும் பழமொழிக்கேற்ப வன்முறையில் இறங்கினர். அதன் பிறகே 'விடுதலைப் புலிகள்' என ஓர் இயக்கத் தினர் தோன்றினர்.

ஆம், அவர்கள் விடுதலைப்புலிகள் தாம். எனினும் தம்முடைய தமிழ் உணர்வின் அடிப்படையில், தமிழர்க்கே உரிய நன்னெறியில்

நின்று சிங்கள மக்களுக்குத் தீங்கேதும் இழைக்காமல், ஏதுமறியாத் தமிழர்களுக்குக் கொடுமை இழைத்த சிங்களப்படையினரை மட்டுமே வேட்டையாடும் புலிகளாக மாறினர். இப்போது அவர்கள் போராளிகள் எனவும் அழைக்கப்படுகின்றனர்.

நீண்ட நாள் போராட்டங்களுக்குப் பிறகு, இந்திய அரசு தலையிட்டு, இலங்கைத் தமிழர் சிக்கலுக்கு வழிவகுக்க முனைந்தது. ஆனால் தமிழ் ஈழம் காண்பதொன்றே அங்குத் தமிழர் வாழ வழி என்பதைத் தமிழ்த் தலைவர்கள் அறுதியிட்டுக் கூறிவிட்டனர்.

சிங்களவர் கொடுமைகளினின்று தமிழரைக்காக்க இந்திய அரசு படை அனுப்பவேண்டும் என்பது உலகெங்கணும் உள்ள தமிழ்த் தலைவர்களின் வேண்டுகோள். அப்படிச் செய்ய இந்திய அரசுக்கு வழியுண்டு-வலு உண்டு-முன்மாதிரியும் உண்டு. எனினும் என்ன காரணத்தாலோ இலங்கைத் தமிழர் சிக்கலைத் தீர்க்க அந்நாள் முதல் இந்நாள் வரை அரசியல் தீர்வு! அரசியல் தீர்வு! என்றே பேசி வருகின்றனர். தூது செல்லும் படலமும் தொடர்ந்து நடந்து - வந்தது; வருகின்றது.

சென்ற திங்களில் இந்தியத் தலைமை அமைச்சர் ராஜீவ்காந்தி அவர்களும் இலங்கை அதிபர் செயவர்த்தனேவும் புது தில்லியில் கூடிப் பேசினர். அதன் விளைவாகச் சிங்களப்படையினருக்கும் விடுதலைவீரர்களுக்குமிடையே ஈழப் பகுதியில் நடந்து வந்த போரினை இருசாராரும் நிறுத்திவிட்டு ஓர், அரசியல் தீர்வுகாண்பது என்ற முடிவு ஏற்பட்டது. தமிழ்த் தீவிரவாதிகளின் ஐந்து அணிகளின் தலைவர்கள் தாங்களும் துப்பாக்கி ஏந்துவதை நிறுத்திவிடுகிறோம் என்றனர்.

இச்செய்திகேட்டு நாமும் மகிழ்ச்சி அடைந்தோம். கொடுமை கட்கு ஆளான தமிழ்ப் பெருங்குடி மக்களும் 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டிருப்பர் என்பதில் ஐயமில்லை,

ஆனால், வாய்ப் பேச்சு பேசிக் கொண்டேயிருக்கையில் கையை நீட்டுவது போல ஒரு பகுதியில் சிங்களப் படையினர் மட்டும் திடுமெனத் தமிழ் வீரர்களைச் சுட்டனர் என்ற செய்திகேட்டு வருந்துகிறோம். தூய ஒரு முடிவுக்கு வந்த பின்னரும் துப்பில்லாத வர்கள் துப்பாக்கியின் துணைதேடுவதை நினைக்கும்போது, தமிழர் ஏமாளிகளல்லர் என்பதைத்தான் இந்திய அரசு அவர்கட்கு உணர்த்த வேண்டும் என்பது நமது வேண்டுகோள்.

ஆனால் சிங்களப் படையினர் சுட்டனர் என்ற செய்தியைச் செயவர்த்தனே மறுத்திருக்கிறார். எதிரிகள் குற்றச் சாட்டைக்

கூறுவதும், ஆள்வோர் அதற்கு மறுப்பு விடுப்பதும் அரசியலில் இயல்புதானே!

இந்நிலையில்தான் இங்கே நமது அரசினர் 'அரசியல் தீர்வு' காண்பதில் முனைப்பாக உள்ளனர். ஏதோ ஒருவழியில் இங்குள்ளோரும் அங்குள்ளோரும் இதில் உறுதி காட்டி வருகின்றனர். இந்த அரசியல் தீர்வு எப்படியிருக்கும் என்பதுதான் நமக்குப் புரியவில்லை.

எது எப்படியிருப்பினும், 'தமிழ் ஈழம்' இல்லை என்றாலும் அதற்கொப்பான ஓர் ஆட்சி முறையேனும் வகுக்கப்பட்டு, தமிழர் அமைதியாக வாழ்கின்றனர் என்ற நிலை ஏற்படுமாயின் அதுவும் வரவேற்கத் தக்கதே. அதற்கு இந்தியத் தலைமை அமைச்சர்தாம் முனைந்து செயல்படவேண்டும்-செயல்படுவார் என்வே நம்புகிறோம். ஆனால் இனி எவ்வகையிலும் தமிழர் கொடுமைக்குள்ளாவதை நல்லோர் எவரும் பொறுத்துக்கொள்ள மாட்டார் என்பது திண்ணம்.

தமிழினம் உலகளாவிய இனம்-நாகரிகம்-நல்லறிவு-பண்பாடு-பழைமை இத்தனையும் கொண்ட இனம், இவ்வினத்தை யாரும் எளிதாகக் கருதி அடிமைகொள்ள நினைத்தால் உலக அமைதி கெடும் என்பது உறுதி.

''நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்'' என்று சொன்னவர் தமிழர், இவ்வுண்மை ஈழத் தமிழரைப் பொறுத்த வரையில் உயிரூட்டமுள்ளது என்பதை ஈண்டு நினைவூட்டுகிறோம்,

எனவே, நாம் நம்புகிறபடி இந்தியத் தலைமையும் இலங்கைத் தலைமையும் நல்லெண்ணத்தோடு ஒன்று பட்டுப் போர்நிறுத்தம் தொடரவும், அமைதி நிலவவும்-சிக்கல் தீரவும்வழிகோலுமாக.

———

## நாமார்க்கும் அடிமையல்லோம்!

சுதந்திரம் என்பது மிகவும் அருமையான பொருள். அதை என்ன விலை கொடுத்து வாங்கினாலும் தகும். ஒரு மனிதன் தன்னுடைய உடம்பைத் தவிர வேறு எந்த உடம்பிலும் புகுந்து வாழ விரும்ப மாட்டான். அதைப் போலவே ஒரு நாடு மற்றொரு நாட்டின்கீழ் அடிமைப்பட்டு வாழ விரும்புவதில்லை.

—காந்தியடிகள்

# தென்புலத்தார்

## [கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

திருக்குறள் இல்வாழ்க்கை மூன்றாங் குறளில் முற்படச் சுட்டப் படுபவர், ''தென்புலத்தார்'' என்பவர் ஆவர்.

தென்புலத்தார் என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகர், ''பிதிரர்'' எனப் பொருளுரைத்து, ''பிதிரராவார் படைப்புக் காலத்து அயனாற் படைக்கப்பட்ட கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்திசையாதலின் தென்புலத்தார் என்றார்'' என்று விரித்துரைத்தார்.

இரண்டாம் குறளில் வரும் 'இறந்தார்' என்பதற்கு, ''ஒருவரு மின்றித் தன்பால் வந்து இறந்தார்க்கும்'' என்று பொருள்கூறி, ''இறந்தார்க்கு நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகிற் செலுத்துதல்'' என விரித்தமையால், இவண் அதனைக் கூறாமலும், தென்புலத் தாரை ஓம்பும்வகை காட்டாமலும் அமைந்தார். தென்புலத்தார் என்பவர் 'பிதிரர்'தாமா?

தென்புலத்தார் பிதிரரே என்பதற்கும், அவர்க்குக் கடனிறுத்தல் புதல்வர் கடன் என்பதற்கும், புறநானூற்றுப் பாடல் ஒன்று சான்றாகக் காட்டப் பட்டுவருகின்றது. முதற்கண், 'அப்பாடல் பொருள் அது தானா என்பதைக் கண்டறிதல் இவ்வாய்வுக்கு வேண்டத் தக்கதாம்.

> ''ஆவும் [1]ஆனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்

---

1. ''ஆவும் ஆனியல்'' என்னும் தொடர், ஆவும் ஆவியல் என்றோ, ஆனும் ஆனியல் என்றோ ஒரொழுங்கில் இருந்திருத்தல் வேண்டும்.

ஆவும், மாவும், கோவும் (ஆ+உம்; மா+உம்; கோ+உம்) என்று வருவது போல் 'ன்' பெற்று ஆனும், மானும், கோனும் என்றும் வரும்.

''ஆமாகோ னவ் வணையவும் பெறுமே'' என்பது நன்னூல். ஒரொழுங்கின்மை ஏடுபெயர்த்தோரால் நிகழ்ந்திருத்தல் வேண்டும். அதுவும் உரையாசிரியர் காலத்திற்கு முற்படவே நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்பது; ''ஆவும் ஆனினதியல்பையுடைய'' எனவரும் அவருரையால் தெளிவுறும்.

பொன்போற் புதல்வர்ப் பெறூஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை''

என்பது மேற்காட்டிய புறப்பாட்டு (9).

இதற்குப் பழைய உரைகாரர், ''ஆவும் ஆனினதியல்பையுடைய பார்ப்பனரும் மகளிரும் நோயுடையீரும் பாதுகாத்துத் தென்றிசைக் கண் வாழ்வோராகிய நுங்குடியில் இறந்தோர்க்குச் செய்தற்கரிய பிண்டோதகக் கிரியையைப் பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறுதீரும் எம்முடைய அம்பை விரையச் செலுத்தக்கடவேம்; நீர் நுமக்கு அரணாகிய இடத்தை அடையும் என்று அறநெறியைச் சொல்லும் மேற்கோள்'' என்றார்.

'தென்புல வாழ்நர்' இறந்தோர் தாமா?

'புதல்வர் கடன்' பிண்டோதகக் கிரியை தானா?

'வடபுலம்' என்பது வடநாடு என்றும், 'தென்புலம்' என்பது தென்னாடு என்றும் பயில வழங்கும் வழக்கு, பாட்டு தொகை பெரும் பாவியம் ஆகியவற்றில் உண்டே!

'தென்புலங் காவலர் மருமான்' 'குணபுலங் காவலர் மருமான், 'குடபுலங் காவலர் மருமான்' எனச் சிறுபாணாற்றுப் படை முறையே பாண்டியனையும் சோழனையும், சேரனையும் வெளிப்படச் சுட்டுகின்றதே!

'தென்புல வாழ்நர்' எனத் தொடர் இருந்தும், இறந்தார்மேல் ஏற்றி வைத்தல் ஏற்கத் தக்கதா?

'அருங்கடன்' என்றால் சோற்று நீர்க்கடனை அன்றி வேற்றுக் கடனொன்றும் இல்லையா?

'கடன் இறுக்கும்' என்பது எத்தகைய அரிய ஆட்சி! அரசிறை : இறை இறுத்தல் இவையெல்லாம் அரசுக்கும், நாட்டுக்கும் செய்யும் கட்டாயக் கடன்கள் அல்லவோ?

கட்டாயம் என்பதே 'கட்டு ஆயம்' (அரசிறை) என்னும் சொல் வழியாகத் 'தீராக் கடமை' என்பதை வலியுறுத்துவதே யன்றோ?

''ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''

என்னும் பொன்முடியார் பாட்டு (புறம். 312), என்ன கடனைப் புதல்வர்க்கு அறுதியிட்டு உரைக்கின்றது?

இவற்றை யெல்லாம் எண்ண வேண்டாவா?

இனித் ''தென் புலவாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்'' என்பதற்குத் தென்னாட்டு வாழ்பவர்க்கு அரிய கடமைகளைச் செலுத்தும்'' என ஒரு நாட்டை மட்டும் சுட்டலாமோ எனின், இப்பாட்டுடைப் பெருவேந்தன், பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி என்பதை அறியின், அவன் நாட்டு வாழ்நர்க்கு ஆற்றும் கடனைச் செய்தற்காம் மக்கள் என்பது தகவே யன்றோ!

ஒருவர் வாழ்நாள் முடியுமுன் வழிவழிக் கடமையை மன்பதைக்கு ஆற்றுமாறு, மக்கட்பேறு பெறுதல் வேண்டும் என்பது தண்டமிழ் நாட்டுத் தலைவழக்காக இருந்ததால் அல்லவோ, ''வீறு சால், புதல்வற் பெற்றனை இவணர்க்கு'' எனப் பதிற்றுப் பத்துப் பாடுகின்றது! 'இவணர்' என்பார் 'இவ்விடத்து வாழ்வார்' என்பதே யன்றோ!

இக் கொள்கை ஊற்றத்தால் அல்லவோ, வடக்கிருந்த கோப்பெருஞ் சோழன் தன்னொடும் வடக்கிருக்க வந்த புலவர் பொத்தியாரை நோக்கிப்,

''புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வா''

எனக் கட்டளையிட்டு நெட்டுயிர்த்தேக வைத்தான்!

ஆகலின், புறப்பாடல் காட்டும், 'தென்புல வாழ்நர்' பிதிரர் அல்லர்: தென்னாட்டாரே என்றும், 'அருங்கடன் இறுத்தல்' சோற்றுநீர்க் கடனன்று: நாட்டுக்குக்கடனே என்றும் கொள்ளத் தக்கனவாம். இப்பொருளே, வழக்கொடு வாய்ந்து வழிவழிச் சிறக்கத் தக்கவையாம்!

இனி,

''வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்''

எனவரும் பதிற்றுப் பத்து, மயக்கமற இருந்தும், அதன் குறிப்புரையோ இல்லா மயக்கத்தை வல்லாங்கு ஊட்டுவதாய்

அமைந்துவிட்டது. ''பெரியோரிடத்தே வணங்கிய மென்மையையும் பகைவர்க்கு வணங்காத ஆண்மையையும் உடைய இளந்துணை யாகிய புதல்வர்களைப் பெற்றமையால் நின்குலத்து முன்னோர்களான பிதிரர்களைக் காப்பாற்றி இல்லறத்தார்க்குரிய பழைய கடன்களைச் செய்து முடித்த வெல்லும் போரைச் செய்யும் தலைவனே'' என்பது அது. (பதிற். 70)

பெற்றோரைப் பேணுதல், பிறந்தோர் பிறவிக் கடன் ஆதலின் 'தந்தை தாய்ப்பேண்' என்பது குழந்தைக் கல்வி ஆயிற்று! முதுமைச் செல்வத்தைப் போற்றுதல் வழிவழி முறைமையாக நிகழ்ந்து வருதலில் 'முதியர்ப்பேணிய' என்பது வழக்காறுகத் திகழ்ந்தது. வாழ்வைத் தந்த பெருமைகளுக்கு வாழ்நாளெல்லாம் கடமை யாற்றினாலும் ஈடாகாது என்பது வெளிப்படையாக இருக்கவும், அவர்தம் முதுமையிலேனும் பேணிக் காத்தல் கட்டாயம் ஆகலின் அது 'தொல்கடன் இறுத்தல்' எனப்பட்டதாம். இருக்கும்முதியரை விடுத்துப் பிதிரரைப் போற்றுதல் இவண் கூறப்பெற்றதில்லை என்க. ஆதலான், பதிற்றுப் பத்திற்குப் புத்துரைகண்ட உரை வேந்தர் ஔவை அவர்கள், ''இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணி'' என்பதற்கு, ''இளந்துணையாகிய மக்களைக் கொண்டு முதியராகிய பெரியோர்க்குரிய தொண்டினைச் செய்வித்து'' என உரைவரைந்தார்.

மேலும், ''மகப்பேற்றினால் பிதிரர் கடன் கழியும் என்னும் வடவர் கொள்கை தமிழ்நாட்டார்க்கு இல்லை. திருவள்ளுவர், மகப்பேறு பிதிர்க்கடனிறுக்கும் வாயிலெனக் கூறாமையே இதற்குச் சான்ற கரியாம்'' என்று தமிழியல் விளக்கமும் அவர் வரைந்தமை பேணிக் கொள்ளத் தக்கதாம்.

இனிக், குறள் கூறும், 'தென்புலத்தார்' தென்னாட்டார் தாமா உலகுக்கு ஒரு நூல் செய்த பொதுமறைப் பொய்யா மொழியார், தென்னாட்டாரைப் போற்றுதலைத் தனியே சுட்டுவாரா? ஆழிப் பெருக்காம் ஊழிக் கொடுமைக்கு ஆட்பட்டு, ஒருகாலத்தில் கடல் கொண்ட தென்னாட்டில் இருந்து வாழ்வு தேடி வந்தவரே இத் 'தென்புலத்தார்' என்று புத்துரைகாண்பவர் கருத்து ஏற்குமா? எக்காலத்துக்கும் ஒத்த பொருளைக் கூற வந்த திருவள்ளுவர், ஒரு காலத்து ஒரு நிகழ்ச்சிக்கு ஆட்பட்டவரைக் காட்டினார் என்பது, வள்ளுவர் வாய்மையர்' வழியாகாதே!

வள்ளுவர் கூறும் தென்புலத்தாரையும் தெய்வத்தையும் அடுத்துவரும் 'ஐம்புலத்தாரில்' காணலாம்.

———

# மணிவிழாக்காணும் அருள்நெறித் தந்தையார்

தமிழ்மாமுனிவர் அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் மணிவிழா சூலை 7, 8ஆம் நாட்களில் குன்றக்குடியில் மிகச் சிருஞ்சிறப்புமாக நடைபெற்றது.

அடிகளாரின் அன்பில் தோய்ந்த மேனாள் கழக ஆட்சியர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களும், கழகப் பெரும் புலவர் சித்தாந்த பண்டிதர் ப இராமநாதபிள்ளை அவர்களும் இன்று இருந்திருந்தால் இவ்விழாவினைக் கண்டு பெருமகிழ்வெய்தி யிருப்பர்.

சமயத் துறையில் இதுகாறும்இருந்து வந்த பழைய நிலை யினை மாற்றி ஒரு மறுமலர்ச்சியினைத் தோற்றுவித்தவர் அடி களார் எனில் மிகையன்று. கண்டதே காட்சி கொண் டதே கோல மென்ற நிலையில் இருந்த தமிழ் மக்களிடையே சிவம் ஒன்றே முழுமுதற்கடவுள் பிறவழிபாட்டு முறைகள் தமிழர் மரபுக்கு ஒவ்வா என எடுத்துரைத்ததோடு சீர்திருத்தப் பாதையில் தமிழர் முன்னேற வேண்டிய இன்றியமையாமையினை வலியுறுத்தி வருபவர் அடிகளார்.

சமயம் கடவுள் ஆகிய கருத்துகட்கு மாறுபட்டோர் கூட அடிகளாரின் நடுநிலையோடு கூடிய சீர்திருத்தச் சமயக் கருத்துகளை ஏற்று மகிழ்ந்தனர். அடிகளார் வெறும் துறவியாக மட்டுமின்றி. தமிழினத்தின் நல்வாழ்வு குறித்தும் அவ்வப்போது பேசியும் எழுதியும் வருகிறார். அரசியலிலும் பங்கு கொண்டு தம்முடைய எல்லையில் நின்று மக்கள்தொண்டே மகேசன் தொண்டு என்ற அடிப்படையில் பொதுப் பணிகளில் ஈடுபட்டு வருகிறார்.

அடிகளார் கருத்தரங்குகளிலும், பட்டிமன்றங்களிலும் கலந்து கொண்டு அவ்வப்போது வெளியிட்டுவரும் பல சமய-வாழ்வியல் கருத்துகள் சிறந்த இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அடிநாளில் பெரியார் அவர்களே இத்துறவியின் தூயதொண்டினைப் பாராட்டினார் எனில் இவர்தம் மாண்புக்கு வேறு சான்று என்ன தேவை!

எனவே, குன்றக்குடி அடிகளாரின் தொண்டுகள் குன்றாது தொடர-சமயம் சீர்திருந்த-பொதுநிலை தழைக்க அடிகளார் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து முத்துவிழா, நூற்றாண்டுவிழா எனப் பல விழாக்கள் காண, எல்லாம் வல்ல முழுமுதற்சிவன் அருள் பாலிப்பானாக!

---

## புது வாழ்வு பெற

சிற்பியிடம் கற்பாறை தரப்படுகிறது. அது அவன் வேலைக் கான மூலப்பொருள், இனி அவனுக்குத் தேவை சிறிய உளியும் பெரிய உள்ளமும், இது போலவே, சுதந்திர இந்தியாவிலே வாசி பர்களுக்குப் பகுத்தறிவும், சுயமரியாதை உணர்வும் தேவை - புது வாழ்வு பெற முழு வாழ்வு பெற.

-பேரறிஞர் அண்ணா

# பண்புத் தொகைகளின் பொருந்தாப் புணர்ச்சி விதிகள்

[புதுவை டாக்டர் சுந்தர சண்முகனர்]

## பொருந்தா விதிகள்

பண்புத் தொகைப் புணர்ச்சி பற்றிப் பவணந்தியார் நன்னூலில் கூறியுள்ள நூற்பாவின் பொருந்தாமையையும், அதனை உரையாசிரியர்களும் ஒத்துக் கொண்டுள்ள இரங்கத் தக்க செய்தியையும் எடுத்துக் காண்பிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். நன்னூலார், எழுத்ததிகாரம்-பதவியலில்,

''செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை உண்மை நுண்மை இவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே''-(8)

என்று பண்புப் பெயர்ப் பட்டியல் தந்துள்ளார். பின்னர், பண்புத் தொகைகளின் புணர்ச்சி விதிகள் பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார் :—

''ஈறு போதல், இடைஉகரம் இய்யாதல்,
ஆதி நீடல், அடி அகரம் ஐ ஆதல்,
தன்னொற்று இரட்டல், முன்னின்ற மெய்திரிதல்,
இனமிகல் இனையவும் பண்பிற்கு இயல்பே''

என்பது அந்தப் புணர்ச்சி விதி (பதவியல்-9) நூற்பா. செம்மை, சிறுமை முதலிய பண்புப் பெயர்கள் பண்பிப் பெயர்களோடு புணருங்கால், இத்தகைய வேறுபாடுகளைப் பெறுமாம். எடுத்துக் காட்டுகள் வருமாறு :-

செம்மை + பொருள் = செம்பொருள்—'மை' என்னும் ஈறு போயிற்று. கருமை + அன் = கரியன்—ஈறு போனதோடு, 'ரு' என்பது 'ரி' ஆனது, 'இடை உகரம் 'இ' ஆனதாகும்: பசுமை + அடை = பாசடை—ஈறு போனதோடு, 'ப' (ப் + அ) என்னும் ஆதி (முதல்) 'பா' (ப் + ஆ) என நீண்டது, பசுமை + தார் = பைந்தார்-ஈறுகளாகிய சுமை என்பன போக, 'ப' என்னும் அடி (முதல்) எழுத்தில் உள்ள 'அ' (அகரம்) என்பது 'ஐ' ஆக, 'பை' என்பது

உருவாயிற்று; இடையிலே, பக்கத்துத் தகரத்துக்கு இனமான 'ந்' மிக்கது; இவை அடி அகரம் ஐ ஆதலும் இனம் மிகலும் ஆம். வெறுமை + இலை = வெற்றிலை — இதில் ஈறு போக, 'ற்' என்னும் ஒற்று இரட்டித்தது; இது, தன் ஒற்று இரட்டலாகும். செம்மை + ஆம்பல் = சேதாம்பல் — ஈற்றுமைபோக, அதன்முன் நின்ற 'ம்' என்னும் மெய் 'த், எனத் திரிந்தது; 'செ' என்னும் முதல் 'சே' என நீண்டது; இப்புணர்ச்சி ஈறுபோதல், ஆதி நீடல் ஆகிய வற்றோடு முன் நின்ற மெய் திரிதலும் ஆகும்,

பொது மக்களின் வழக்குகளின் வாயிலாக இலக்கணம் படைத்த நன்னூலாரும் உரையாசிரியர்களும், பண்புத்தொகைப் புணர்ச்சியைப் பொறுத்தமட்டில், பொதுமக்கள் பேசிக் கற்பித்த இலக்கணக் குறிப்பை நன்ருகப் புரிந்து கொள்ளவில்லை. இதற்கு விளக்கம் வருமாறு :-

கால் + ஒடிந்தது = கால்ஒடிந்தது = காலொடிந்தது — என்னும் பொதுமக்களின் வழக்கைக் கொண்டு "உடல்மேல் உயிர்வந்து ஒன்று வது இயல்பே" (நன்னூல்—204) என்னும் இலக்கணத்தைப் புல வர்கள் கற்றுக்கொண்டனர். பிரெஞ்சு மொழியிலும் இஃது உண்டு;-

Coment + allez + vous—என்பவற்றைத் தனித் தனியாகச் சொல்லும் போது, கொம்மாங்—அலே-வு-என ஒலிக்கப் பெறும்; இணைத்துச் சொல்லும்போது, Commen tallez vous—"கொம்மாங் தலேவு" என ஒலிக்கப் பெறும்; Comment என்னும் நிலைமொழி யின் இறுதியில் உள்ள t என்னும் மெய்யெழுத்து, தனியாகச் சொல்லும் போது ஒலிபெருது (Silent); பக்கத்தில் உள்ள 'a' என்னும உயிர்முதல் வருமொழியோடு புணருங்கால், 't' என்னும் உடல் (மெய்) மேல் 'a' என்னும் உயிர் வந்து ஒன்றி 'ta' (த) என ஒலிக்கப் பெறும், How are you? (How do you do?) என்பது இதன் ஆங்கிலப் பொருளாகும்.

கல் + உடைந்தது = கல்-ல்-உடைந்தது - கல்லுடைந்தது என்னும் பொதமக்களின் வழக்கைக் கொண்டு "தனிக்குறில் முன் ஒற்று உயிர் வரின் இரட்டும்"-(நன்னூல்-205) என்ற இலக்கணத்தைப் புலவர்கள் கற்றனர். ஆங்கிலத்திலும் இஃது உண்டு. எ, கா:- big + est = Biggest (பிக் + எஸ்ட் = பிக்கெஸ்ட்) Thin + er = Thinner (தின் + எர் = தின்னெர்); Cut + ing = Cutting (கட் + இங்க் = கட்டிங்க்) முதலியவற்றைக் கேட்டு + அறிந்தேன் = கேட்டு அறிந் தேன் = கேட்டறிந்தேன் என்னும் வழக்கைக்கொண்டு "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்" (நன்னூல்—164) என்னும் இலக் கணம் கற்றனர். இரண்டு உயிர் எழுத்துகள் சேரின் ஒன்று கெடும் என்னும் விதி ஆங்கிலத்திலும் ஒரு சில இடங்களில் உண்டு,

எ.கா :- No+one=None; No+ever=Never;; I+am=I'm முதலியன. இது பிரெஞ்சிலும் உண்டு; எ. கா:-Je+ai=Jai என ஒலிக்கப் பெறும். I have என்பது இதன் ஆங்கிலப் பொருள் ஆகும்.

காலொடிந்தது என்பதில் முதல் எழுத்தாகிய 'கா' என்னும் நெடிலுக்கு ஒலிப்பு முயற்சி மிகுதியாகச் செலவிடப்பட்டதால், அடுத்து அழுத்தம் பெறமுடியாமற் போன 'ல்' என்பதோடு வருமொழி முதலாகிய 'ஒ' சேர்ந்து 'லொ' என்ருயிற்று. கல்லுடைந்தது என்பதில், 'க' என்னும் குறிலுக்கு ஒலிப்பு முயற்சி மிகுதியாகச் செலவிடப்படாததால், அடுத்த 'ல்' என்பது அழுத்தம் பெற்று இரட்டித்தது; கல்+ல்+உடைந்தது=கல்லுடைந்தது.

கேட்டறிந்தேன் விளக்கெரிந்தது என்பவற்றில் குற்றுகரங்கட்கு முன் உள்ள ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகளே ஒலிக்க முயற்சி மிகுதியாகச் செலவிடப்பட்டதால், குற்றுகரம் ஒலி பெருமல் அடுத்த உயிர் எழுத்துக்கு இடம் தந்தது; கேட்டு+அறிந்தேன்=கேட்ட்உ+அறிந்தேன். கேட்ட்+அறிந்தேன்=கேட்டறிந்தேன்.

இவை பொதுமக்கள் வாயிலாகப் புலவர்கள் அறிந்த இலக்கணம் ஆகும்.

கால் ஒடிந்தது என்பது காலொடிந்தது எனவும், கல் உடைந்தது என்பது கல்லுடைந்தது எனவும், கேட்டு அறிந்தேன் என்பது கேட்டறிந்தேன் எனவும் பேச்சுப் புணர்ச்சியில் மாறினது போல, செம்மை+தாமரை என்பதைச் செம்மைத் தாமரை—செம்மைத் தாமரை என ஆயிரம் முறை கூறினும், செந்தாமரை என்பது வராது. செம்மை+ஆம்பல் என்பதைச் செம்மை ஆம்பல்-செம்மைஆம்பல் எனப் பதிளுயிரம் முறை கூறினும், சேதாம்பல் என்பது வராது. பசுமை+தார் என்பதைப் பசுமைத்தார்—பசுமைத் தார் என நூருயிரம் முறை கூறினும் பைந்தார் என்பது வராது.

இதிலிருந்து தெரிவதாவது :-செம்மைத் தாமரை என்பதோ—செய்ய தாமரை—செய்யது தாமரை—என்னும் பிறவோ செந்தாமரை—எனவும், செம்மை ஆம்பல் என்பதோ பிறவோ சேதாம்பல் எனவும், பசுமைத்தார் என்பதோ பிறவோ பைந்தார் எனவும் தொக்கி இருக்கவும் இல்லை—புணர்ச்சி விதி பெற்றிருக்கவும் இல்லை என்பது உண்மையாகும். இந்த அடிப்படை இலக்கண உண்மையைக் கூட அறியாத இலக்கணப் புலவர்கள் மிகவும் இரங்கத்தக்கவர்கள். அந்தோ அவர்கள் நனி அளியர்!

### பொருந்தும் புணர்ச்சி விதிகள் :

உண்மை இஃதெனின், எவ்வெச் சொற்கள் எவ்வெவ்வாறு புணர்ந்தன எனக்கூறவேண்டும். செ, சே என்னும் ஓரெழுத்துமொழி கட்கே சிவப்பு (செம்மை) எனனும் பொருள் மறைந்தும் மறையாதது மாய் மக்கள் வழக்கில் உண்டு. இதே போல, கரி-கரு-கார். என்ப வற்றிற்குக் கருமைப் பொருளும், பசு - பாசு - பை -பைது-என்ப வற்றிற்குப் பசுமைப் பொருளும், வெள் என்பதற்கு வெண்மைப் பொருளும் உண்டு. செக்கச் செவேரென, கன்னங் கரேரென - பச்சைப் பசேரென - வெள்ளை வெளேரென என்னும் வழக்காறு களையும் நோக்கவேண்டும்.

செக்கம் - செக்கர் - செக்கல் - என்பவை சிவப்புப் பொருளன. செவ்வல் = செந்நிறம். எ. கா:-''செவ்வலங் குன்றம்''-(களவழி நாற்பது-10). செவலை என்பதற்குச் சிவப்பு ஆள், சிவப்பு விலங்கு, செந்நிறமுடைய பொருள்—என்னும் பொருள்கள் உண்டு, இவற்றிற் கெல்லாம் அடிப்படை 'செ' என்பதே.

செம்மை என்பதற்கு உரிய ஒழுங்கு - நேர்மை என்னும் பொருளைக் குறிக்கும் சொற்கட்கும் 'செ' எனபது அடிப்படையாய் உள்ளது. எடுத்துக் காட்டுகள் :-செவ்வழி (நன்னெறி) - ''கைதவம் திரும்பாச் செவ்வழி நிறீஇ''(பெருங்கதை—மகதம் - 15, 19), செவ்வழிபாடு (ஒழுங்கான வழிபாடு) ''செவ்வழிபாடராகிச் சிலைத் தொழில் சிறுவர் கற்ப''-(சீவக சிந்தாமணி—1758) செவ்வன் (செவ்வையாய்)-''செவ்வன் இறை காக்கும் இவ்வுலகு''-(புறப் பொருள் வெண்பாமாலை-283) செவ்வனம் (செவ்வையாய்) ''செவ் வன் செல்லும் செம்மை தானிலள்'' - (மணிமேகலை-3-81). செவ்வை (நேர்மை)-''தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி'' (சிலப்பதிகாரம்-வழக்குரை காதை-68) இன்னும் இதே பொருளில் செவ்விதின் - செவ்விது - செவ்விய - செவ்வியர்-செவ்வினையாளர் செவ்வு - செவ்வே - முதலிய சொற்கள் இலக்கியங்களில் நிரம்ப எடுத்தாளப்பட்டுள்ளன, ஈண்டு விரிப்பிற் பெருகும். எனவே, இனி அகர முதலி தொகுப்பவர்கள், ''செ = செம்மை'' என்பதையும் சேர்த்துக்கொள்வது நல்லது.

மற்றும், 'சே' என்பதற்கும் சிவப்புப் பொருள் உண்டு ; எ. கா:- ''சேக் கொள் கண்ணை'' — (கல்லாடம் - 85—9) சேத்தல் = சிவத்தல்-''அவன் வேலிற் சேந்து'' (கலித்தொகை-57) சேது என்பதற்கும் செந்நிறப் பொருள் உண்டு. சேது + ஆ = சேதா = சிவந்த பசு-''சிலம்பின் மேய்ந்த சிறு கோட்டுச் சேதா'' (நற்றிணை-359-1). சேயோன் = செந்நிற முருகன் - ''சேயோன் மேய'' - (தொல்காப்பியம்)

பாசு-பை-பைது-என்பவற்றிற்கும் பசுமைப் பொருள் உண்டு; எ்கா :- பாசு- "பாசு ஆர் மேனிப் பசுங் கதிர் ஒளியவும்" - (சிலப்பதிகாரம்-14-185) ; பாசு ஆர்மேனி=பசுமை பொருந்திய உடம்பு. ஈண்டு,பாசு என்பது, பக்கத்தில் பண்பிப் பெயர்ச் சொல்லைத் தொடராமல் 'ஆர்' என்னும் வினைச் சொல்லைத் தொடர்ந்திருப்பது காண்க. எனவே, பாசிலை என்பதைப் பசுமை+இலை எனப் பிரிக்காமல் பாசு+இலை என்றே பிரிக்கலாம்.

பை : "பைதீர் பாணரொடு" (மலைபடுகடாம்-40); "நும்பை தீர்கடும்பொடு" (பெரும்பாணாற்றுப்படை - 105)' முறையே நச்சினார்க்கினியரின் உரைகள்:- 'பசுமையற்ற பாணரோடே" "பசுமை யற்ற சுற்றத்தோடே"; ஈண்டு 'பை' என்பது, பக்கத்தில் பண்புப் பெயரைத் தொடராமல் 'தீர்' என்னும் வினைச் சொல்லைத் தொடர்ந்திருப்பது காண்க.

பைது: "கோடை நீடிய பைது அறு காலை" (அகநானூறு-42-6); "நிலம் பைது அற்ற புலங்கெழு காலையும்" (பதிற்றுப் பத்து-23-3); பைது என்பது, 'அறு' என்னும் வினைச் சொல்லைத் தொடர்ந்திருப்பது காண்க. பைம்மை என்பதற்கும் பசுமைப்பொருள் உண்டு.

'கார்' என்பதற்கும் கருமைப் பொருள் உண்டு, எ. கா :- "களங்கனியைக் கார் எனச் செய்தாரும் இல்" (நாலடியார்-103); எனவே, காரா என்பதைக் கருமை+ஆ எனப் பிரிக்காமல், கார்+ஆ என்றே பிரிக்கலாம். இவற்றிற்கு நிகண்டுச் சான்றுகள் வருமாறு :-

திவாகர நிகண்டு—பண்புப் பெயர்த் தொகுதி :

"செம்மை...சேத்து...சேந்து, செக்கர்
சேப்பு...சிவப்பென அறைவர்"—47.
"பாசும் பைம்மையும் பைத்தும் பச்சை"—51
"கார், களம், நீலம், கருள், கருமை"—52.
சூடாமணி நிகண்டு - பண்புப் பெயர்த் தொகுதி:-
"சேது, பூவல், சேய், சேப்பு, இவை சிவப்பாம்"-20
"பாசு, பை, அரிதம், பசுமை, பச்சை—21
"கருள்' களம், காரி, கார், கறுப்பின் பெயரே"-22

என்பனவாம். புணர்ச்சி இலக்கண விதிகள் என்பன, மக்கள் வழக்காற்றின் எதிரொலிகளே. அதன் அடிப்படையிலேயே புணர்ச்சி இலக்கண விதிகள் கற்பிக்கப்பட்டுள்ளன என்பது ஈண்டு மீண்டும் நினைவு கூரற்பாலது,

செ, சே, சேது, கரு, கரி, கார், பசு, பாசு, பை, பைது முதலியனவன்றி, செம்மை - கருமை-பசுமை முதலியனவும் பேச்சு வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் இடம் பெற்றுள்ளன, ஆங்கிலத் தில் ment, sion, tion, ship-என்னும் ஈறுகளில் முடிந்திருக்கும் Agreement, Admission, Addition, membership - முதலிய சொற்களைப் போல, தமிழில் அல், தல் முதலிய ஈறுகளில் முடியும் உண்ணல், செய்தல் முதலிய தொழிற்பெயர்களும், மை ஈற்றில் முடியும் செம்மை, சிறுமை முதலிய பண்புப் பெயர்களும் உருவாகி யுள்ளன. உண்ணல் + கலம் = உண்கலம் எனவும், செய்தல் + வினை = செய்வினை எனவும் ஆயின என்று கூற முடியாததைப் போலவே, செம்மை + ஆம்பல் = சேதாம்பல் எனவும், பசுமை + தார் = பைந்தார் எனவும் ஆயின என்றும் கூற முடியாது. அடிப் படைச் சொற்கள்போல் மயக்குகிற 'மை' ஈறு கொண்ட செம்மை, பசுமை முதலிய பண்புப் பெயர்களைக் கண்ட புலவர்கள், அவையே, செ-சே-சேது-பசு-பாசு-பை-முதலிய 'அவதாரங்கள்' (பிறவிகள்) எடுத்ததாகத் தவருக எண்ணிவிட்டனர்,

மாணக்கர்கட்கு இப்போது நடத்தப்பெறும் தேர்வுகளில், சேதாம்பல் என்பதைப் பிரித்தெழுதுக என்று வினவின், செம்மை + ஆம்பல் எனப் பிரித்துக் காட்டினுல்தான் மதிப்பெண் கிடைக்கும். பைந்தார் என்பதற்குப் புணர்ச்சி விதி கூறுக என்று வினவின், பசுமை + தார் எனப் பிரித்து, ''ஈறு போதல்''என்னும் நன்னூல் நூற்பாவின்படி புணர்ச்சி இலக்கணம் கூறினுலேயே மதிப்பெண் கிடைக்கும். பொருந்தாத இந்த நிலைமை மிகவும் வருந்தத்தக்கது.

எனவே, காலொடிந்தது, கல்லுடைந்தது கேட்டறிந்தேன் முதலிய புணர்ச்சிகட்கு உரிய இலக்கண விதிகளைப் பொதுமக் களின் வழக்காற்றிலிருந்தே புலவர்கள் உருவாக்கியதைப் போலவே, சேதாம்பல், பைந்தார் முதலியவற்றின் புணர்ச்சி விதிகளையும், பொது மக்களின் வழக்கை அடிப்படையாகக் கொண்டு புலவர்கள் உருவாக்கல் வேண்டும்.

ஆகவே, பண்புத் தொகைப் புணர்ச்சியில், செ-சே-சேது-கரு-கரி-கார்-பசு-பாசு-பை-வெள்-முதலிய பண்புச்சொற்களோடு, இப் பண்புகளை உடைய பண்பிப் பெயர்கள் புணர்ந்ததாகக் கொள்ளலே பொருத்தம் உடையதாகும்.

---

# குடந்தைக் கீழ்க்கோட்டம் கல்வெட்டுகள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி., பி. எசு. டி. ஓ.]

(முன் இதழ் ௪0௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

உத்தம சோழனின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, காரிக்கோளம்பன் என்ற கைக்கோளர் பெயரால் திருக்கீழ்க் கோட்டத்துப் பரமசாமி கோயிலில் விளக்கொன்று எரிப்பதற்காகத் திருக்குடமூக்கு ஊரவையார் நிலமொன்றினை விற்பனை செய்த செய்தியைக் கூறுகிறது.[34] இம்மன்னனுடைய எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டு இங்குள்ளன, ஒன்று இக்கோயிலில் விளக்கெரிக்கத் தொண்ணூற்றுறு ஆடுகள் தரப்பட்டதைக் கூறுகிறது. இக்கல்வெட்டில் வரும் 'உத்தமசோழ நம்பிராட்டியார்! என்னும் தொடர் உத்தம சோழனின் தேவியைக் குறிப்பதாகும்.[35] இன்னொரு கல்வெட்டு விளக்கெரிக்கத் தரப்பட்ட தொண்ணூற்றுறு ஆடுகளைப் பற்றிக் கூறுகிறது, இக்கல்வெட்டிலுள்ள காலக்குறிப்பைக் கணித்த திரு. எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளையவர்கள் இதை உத்தமசோழனுடையதென வரையறுக்கிறார்கள்,[36] இம்மன்னனுடைய பதின்மூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இவனுடைய நம்பிராட்டியாரான வீரநாராயணியார் திருக்கீழ்க்கோட்டத்துப் பெருமான் கோயிலுக்குப் பூமாலைகள் கட்டித் தருவதற்கு வாய்ப்பாக நிலக் கொடையளித்த செய்தியைத் தருகிறது.[37]

முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டுகள்

சோழப் பேரரசர்களிடையே ஒரு ஒளி விளக்காய்த் திகழ்ந்த முதலாம் இராசராசனின் வீரமகனான முதலாம் இராசேந்திரன் பெரும் ஆற்றலாளன். வடபுலத்துப் படையெடுப்பும், கடல்கடந்த போர்களும் இவனுக்குக் கங்கைகொண்ட சோழன், கடாரம் கொண்டான் போன்ற சிறப்புப் பெயர்களை ஈட்டித் தந்தன, அறிவாற்றல் நிறைந்த இப்பெருமகனைப் பண்டித சோழனென்றும்

34. ARE 245 of 1911
35. ARE 234 of 1911
36. ARE 229 of 1911
37. ARE 240 of 1911

அறிஞர் பெருமக்கள் அழைத்து மகிழ்ந்தனர். கி. பி. 1012இல் இருந்து 1044 வரை ஏறத்தாழ முப்பத்திரண்டு ஆண்டுகள் அரசாண்ட இப் பேரரசனின் இரண்டு கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன.

இங்குக் காணப்படும் முதலாம் இராசேந்திரனுடைய ஆறும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, உய்யக் கொண்டார். வளநாட்டைச் சேர்ந்த பாம்பூர் நாட்டுத் திருக்குடமூக்கு ஊரவையார், திருக்கீழ்க் கோட்டத்து உடையார் கோயிலின் திருவிமானத்திலுள்ள செல்வப் பிரானுக்குக் காணிக்கைகள் வழங்க வாய்ப்பாக நிலக்கொடையளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.[38] இக்கல்வெட்டை முதலாம் இராச ராசனுடைய ஆறும் ஆட்சியாண்டுக் கல்வெட்டென்று திரு. எஸ், ஆர். பாலசுப்பிரமணியம் தம் நூலில் தவருகக் குறித்திருக்கிருர்.[39] இக்கல்வெட்டால் விமானத்திலுள்ள தெய்வ வடிவங்களுக்கும் வழி பாடுகள் நடந்த புதுச்செய்தி நமக்குத் தெரியவருகிறது,

இம்மன்னனின் எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று இக்கோயிலில் நிறுவப்பட்டிருந்த சந்திரசேகர தேவரின் திரு மேனிக்கு வழிபாடுகள் செய்ய ஏற்பாடாகியிருந்த செய்தியைக் கூறுகிறது.[40] இக்கல்வெட்டையும் திரு. எஸ். ஆர். பாலசுப்பிர மணியம் முதலாம் இராசராசனுடையதென்று தவருகக் குறித்திருக் கிருர்[41]

முதலாம் இரசாதிராசனின் கல்வெட்டு

முதல் இராசேந்திரனின் மகனுன முதலாம் இராதிராசன் கி. பி 1018இல் இருந்து 1054 வரை ஏறத்தாழ முப்பத்தாறு ஆண்டுகள் அரசாண்டான். கல்யாணபுரம் கொண்ட சோழ னென்றும், விசய இராசேந்திரன் என்றும் சிறப்புப் பெயர்கள் பெற்ற இப்பெருவேந்தனின் முப்பத்தாறும் ஆட்சியாண்டுக் கல்வெட் டொன்று இக்கோயிலில் உள்ளது. இது 498 கழஞ்சு பொன்னுக்கு நில விற்பனை செய்யப்பட்ட செய்தியையும் அந்நிலங்கள் இறையிலி யாக்கப்பட்ட செய்தியையும் கூறுகின்றன.[42]

---

38. ARE 256 of 1911

39. *முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பால சுப்பிரமணியம், பக். 124*

40. ARE 15 of 1908

41. *முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பால சுப்பிரமணியம், பக். 124*

42. ARE 14 of 1908 .

**மூன்றும் குலோத்துங்கனின் கல்வெட்டு.**

திரிபுவன வீரதேவன் என்ற சிறப்புப் பெயருடன் கி.பி. 1178 இல் இருந்து 1218 வரை ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் சோழ நாட்டை அரசாண்ட மூன்றும் குலோத்துங்கனின் முப்பத்தைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று இக்கோயிலில் காணப்படுகிறது. வேலூரைச் சேர்ந்த ஆழ்வார் திருப்புறம்பியம் உடையான் என்னும் செம்பியன் பல்லவராயன் இக்கோயிலில் திருப்புறம்பியம் உடையார் என்னும் தெய்வத்திருமேனியை நிறுவி, அதன் வழிபாட்டிற்கும், திருக்கீழ்க் கோட்டம் உடையாருக்கு மகர தோரணம் அமைக்கவும் கொடை வழங்கிய செய்தியை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.[43]

**மூன்றும் இராசராசனின் கல்வெட்டுகள்**

கி. பி. 1216 இல் இருந்து கி, பி. 1256 வரை அரசாண்ட மூன்றும் இராசராசனின் இரண்டு கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. இவை இக்கோயிலில் உள்ள அம்மையப்பர் கோட்டத்தைப் பற்றிப் பேசுகின்றன. அம்மையப்பர் கோட்டத்தை இக் கல்வெட்டுகள் 'மடந்தைபாக நாயனுர் கோயில்' என்று குறிக் கின்றன. ஒரு கல்வெட்டு மடந்தைபாக நாயனுர் கோயிலைப் பழுது பார்க்கவும், இக்கோயிலுக்குத் தேவையான நகைகளுக் காகவும் கூத்தாடும் திருஞானசம்பந்தம் மடந்தை பாகன் என்பவர் நிலக்கொடையளித்ததைக் கூறுகிறது.[44] இன்னொரு கல்வெட்டு இம்மடந்தைபாக நாயனுர் கோயில் விழாவுக்கு அந்தணப் பெண் ணொருத்தி நிலக்கொடை அளித்ததைக் குறிக்கிறது.[45] இம் மடந்தைபாக நாயனுர் என்ற திருப்பெயர் மையக்கோயில் இறை வனுக்கே அதாவது அருள்மிகு நாகேசுவரர்க்கே வழங்கிய இன்னொரு பெயரென்று தலவரலாறு தவருகக் குறிப்பிடுகிறது.[46] கல்வெட்டில் மிகத் தெளிவாய்த் 'திருக்குடமூக்கிலுள்ள திருக்கீழ்க் கோட்டம் உடையார் கோயிலில் அமைந்திருக்கும் மடந்தைபாக நாயனுர் திருமுன்' என்ற பொருள் தோன்றும்படி குறித்திருந்தும்; தலவரலாறு தவருன செய்தியையே தருகிறது. இப்போதும் கூடத் தேவகோட்டத் தெய்வமான கொற்றவைக்குப் பல கோயில்களில் வழிபாடுகளும் பாவாடை சார்த்தலும் நடந்தவாறிருப்பதை நாம் அறிவோம். எனவே மூன்றும் இராசராசன் காலத்தில் அம்மையப்பர் கோட்டவழிபாடு இருந்தமை குறித்து வியப்புற ஏதுமில்லை.

---

43. ARE 260 of 1911 .
44. ARE 258 of 1911
45. ARE 257 of 1911
46. கும்பகோணம் நாகேசுவரசாமி கோயில் வரலாறு, பஞ்சநதம் பிள்ளை, பக். 10.

இம்மன்னனின் இருபதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் பிற் பகுதியில் கூத்தாடும் திருஞானசம்பந்தன் மாணிக்க வாசகம் என் பான் தன்னால் இக்கோயிலில் எடுப்பிக்கப்பெற்ற கூத்தாடும் திரு ஞானசம்பந் தேசுவரம் உடையார் கோயிலுக்கு நிலக்கொடை யளித்த செய்தி காணப்படுகிறது.[47] இக்கல்வெட்டில் குறிக்கப் படும் 'கூத்தாடும் திருஞானசம்பந்தேசுவரம் உடையார்' என்னும் உட்கோயில்தான் இப்போது இக்கோயிலில் காணப்படும் ஆட வல்லான் திருமுன்னாகும். இது ஒரு தேர்போல வடிக்கப்பட்டுள்ளது. இதன் இரு புறங்களிலும் பெரிய கல்சக்கரங்கள் பொருத்தப்பட் டுள்ளன, ஒவ்வொரு சக்கரத்திலும் பன்னிரண்டு ராசிகள் சிற்பங் களாக அமைக்கப்பட்டுள்ளன. முன்பக்கம் இரண்டு குதிரைகளும், நான்கு பெரிய யானைகளும் அருகே பாகர்களின் வடிவங்களுடன் காட்டப்பட்டுள்ளன. இதன் அடித்தளத்தில் பல ஆடல் தோற்றங் களை விளக்கும் அழகிய சிற்பங்களைக் காணலாம். இம் மண்ட பத்தின் உள்ளே உயரமானதொரு மேடையில் ஆடவல்லான் திருவடிவம் அமைந்துள்ளது.

### மன்னன் பெயரோ அடைமொழியோ அற்ற கல்வெட்டுகள்

இக்கோயிலில் மன்னன் பெயரோ, அடைமொழியோ அறிய முடியாத கல்வெட்டுகள் இரண்டு உள்ளன. இக்கோயிலில் விளக்குகள் எரிக்க இரு தனியர்கள் பொற்கொடையளித்த செய்தியை ஒரு கல்வெட்டு தெரிவிககிறது.[48] சோழ மன்னனான... ... சரிவர்மனின் (இவன் ராசகேசரியா பரகேசரியா என்பது தெரிய வில்லை) ஆறும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு[49] இங்கல் நாட்டைச் சேர்ந்த இங்கல் மாதேவன் கோடை மாறன் என்பார் வடகரை பாம்பூர் நாட்டுத் திருக்குடமூக்கி லுள்ள திருக்கீழ்க் கோட்டத்துப் பரமசாமி கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தொண்ணூற்றுறு ஆடுகள் கொடையளித்ததைக் குறிபபிடுகிறது. இக்கல்வெட்டின் எழுத்தமைதி சொல்லப்பட்டிருக்கும் செய்தி ஆட்சியாண்டு இவை கொண்டு நோக்கும்போது இது பரகேசரிவர்மனான உத்தமசோழ னுடையதாக இருக்கலாமென எண்ணத தோன்றுகிறது.

### விசயநகரப் பேரரசின் கல்வெட்டு

மகாமண்டலேசுவர கோனேரிதேவ மகாராயருடைய காலத்தில் தேசிராய மாணிக்கத்தின் மகன் திம்மண்ணன் மடந்தைபாகக் கொங்க

47 .ARE 258 of 1911
48. ARE 242 Of 1911
49. ARE 223 Of 1911

ராயன் என்பாருக்கு, அவர் மடந்தைபாக நாயனுர் கோயிலுக்குச் செய்த சேவையைப் பாராட்டி, அவருக்குக் கோயில் ஆட்சியார், வீடு, நிலம், உணவு முதலியன அளித்ததை விசயநகரக் கல்வெட்டு உணர்த்துகிறது.[50]

இக்கல்வெட்டுச் செய்திகள் நானூறு ஆண்டு காலத்துச் சமுதாய அமைப்பு முறையை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றன. இக்கோயிலின் படிப்படியான வளர்ச்சி நிலைகளையும், இக்கோயிலின்பால் மக்களுக்கும் மன்னர்களுக்கும் இருந்தஈடுபாட்டையும் இககல்வெட்டுச் செய்திகள் நமக்கு இனிதே உணர்த்துகின்றன, அற்புதமான கட்டட அமைப்பும், கண்ணைக் கவர்ந்து கருத்தில் நிலைக்கும் சிற்பத் திருமேனிகளும் நிறைந்த இக்கோயிலை அப்பர் பாடியிருப்பதால் இது அவர்காலமான ஏழாம் நூற்றுண்டிலேயே செழிப்புடனும் சிறப்புடனும் விளங்கியது என்பது கண்கூடு, செங்கல் தளியாக இருந்த இதைக் கற்றளியாக்கிக் கண்டோரை மயக்கும் மயன் படைப்புகளை இங்கே உருவாக்கக் காரணமாக இருந்த மாமன்னன் யார் ?

(தொடரும்)

50. ARE 259 Of 1911

---

## திருக்குறள் நெறிபரப்பு மையம் சிறப்பு மாநாடு

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் இயங்கும் திருக்குறள் மையம் 30-6-2016 தி. பி. ஞாயிறு (14-7-85)காலை முதல் மாலைவரை சிறப்பு மாநாடு நடத்த இருக்கிறது. இம்மாநாட்டில் தமிழகச் சான்ருேர் பெருமக்களும் அமைச்சர் பெருமக்களும், திருக்குறள் அறிஞர்களும் தொண்டர்களும் பங்குகொண்டு சிறப்பிக்க இருக்கிருர்கள்.

பதக்கங்கள், பொன்னுடைகள் பட்டங்கள் அளித்தல், நூல் வெளியீடு செய்தல் முதலானவற்ருல் வள்ளுவர் கோட்டம் சீரிய செயல்கள் திகழச் செயற்படவுள்ளது என்று மைய இயக்குநர் திருக்குறளார் அறிவிக்கிருர்-

# "ஆராத இன்பன் அகலாத அன்பன்"

[பேராசிரியர். மா. சண்முகசுப்பிரமணியம்]

இறைமை ஞானத்தை எவரும் உணரும் வகையில் எளிமையாகவும் இனிமையாகவும் உணர்த்துவது செந்தமிழ், எந்த மொழியிலும் இல்லாத அளவிற்குத் திட்பமும் நுட்பமும் செறிந்த முறையில் இறைமையின் ஏற்றத்தினை இயம்புகிறது இன்தமிழ். இது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை என்பதை நாம் எளிதிற் காணலாம்.

இறைவனின் தன்மை எப்படிக் கூறப்படுகிறது செந்தமிழில் எனக் காண்போம்.

**இறைவனின் தன்மையினை யாரறிவார்?**

எங்குமாய் எல்லாமாய் என்றுமாய் இலங்கும் இறைமையின் தன்மையினை எவர்தாம் அறிய முடியும்? இந்த வினாவை எழுப்புகின்றார் தமிழ் ஞான சம்பந்தர் :

''பவளமேனியர் திகழும் நீற்றினர்,
பட்டினத்துறை பல்லவனீச்சரத்து,
அழகராயிருப்பார், இவர் தன்மை அறிவாரார்?''
(திருப்பல்லவனீச்சரம்)

ஒரு பொருளின் தன்மையினை நாம் எவ்வாறு காண்கின்றோம்?

தேனின் தன்மை இனிப்பு என்கிறோம். எவ்வாறு? நாம் அதைச் சுவைத்துப் பார்க்கிறோம், அஃது இனிப்பாக இருக்கிறது. ஆதலால், அதன் தன்மை இனிப்பு என்று கூறுகிறோம்.

எனவே, ஒரு பொருளைப் பொறுத்து நம் அனுபவம் எதுவோ அதுவே அப் பொருளின் தன்மை எனக் கொள்கிறோம்.

மெய்யடியார்கள் இறைமை அனுபவத்தில் திளைக்கின்றனர். அந்த அனுபவத்தை இறைவனின் தன்மை என்று நமக்கு உணர்த்துகின்றனர்.

உள்ளம் உருகி இறைவனை நினைத்தவுடன் ஓர் உவகை எழுகின்றது. உடலினுள்ளேயே அமுதத்தைப் பருகினால் எத்தகைய இன்பம் பிறக்குமோ அத்தகைய இன்பம்பிறக்கின்றது. இஃது அடியார்களின் இன்ப அனுபவம். இந்த அனுபவமே இறைவனின தன்மை என்று இயம்புகின்றார் ஞானசம்பந்தர்:

"உருகிட உவகை தந்து உடலினுள்ளால்
பருகிடும் அமுதனைப் பண்பினனே
………"

(திருப்பிரமபுரம்)

பருகிடும் அமுதைப்போன்றவன், உருகிட உவகை தருபவன். இதுவே, பரம் பொருளின் பண்பு!

இறைவனின் தன்மையினை யார் அறிவார் என்ற வினா எழுப்பிய வித்தகர், "பருகிடும் அமுதனைப் பண்பினன் இறைவன்" என்ற விடையினையும் கூறி இறைமை நலத்தை நமக்குப் போதிக்கின்றார்!

**தேன், பால், தித்திக்கும் இன்னமுது :**

இறைவனின் ஈடில்லாத இன்பம் அருட்பாடல்களிலே எவ்வளவு திட்பமாகக் கூறப்பெறுகின்றது!

"தேனினும் இனியர் பாலன நீற்றர்
தீங்கரும்பனையர் தம் திருவடிதொழுவார்,
ஊன் நயந்துருக உவகைகள் தருவார்…"

(திரு அச்சிறுபாக்கம்)

நாம் உருகி நினைந்தால் உவகைகள்தரும் அந்த ஒண்பொருள் தேனினும் இனியது, தீங்கரும்பனையது, பாலினும் சுவையுடையது என்கிறார் சம்பந்தர்.

"………
எம்மானை என்னுள்ளத்துள்ளே ஊறும்
அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்கும் தீங்கரும்பை அரனை
………"

(திருப்புள்ளிருக்கு வேளூர்)

என்று இறைவனைப் பாடுகின்றார் நாவுக்கரசர்.

"அடியார்கட்கு ஆரமுதம் ஆனான் கண்டாய்"

(திருக்கோடிகா)

என்றும்,

“தேனும் இன்னமுதும் ஆனுர் திருச்செம்பொன் பள்ளியாரே”
(திருச்செம்பொன்பள்ளி)

என்றும் அவர் பாடுகின்ருர்.

“.........
தேனே இன்னமுதே ஒரு மேற்றளியுறையும் கோனே......”
(திருமேற்றளி)

என்று துதிக்கின்ருர் சுந்தரர்.

“தேனை, பாலை, கன்னலின் தெளிவை,
ஒளியை, தெளிந்தார் தம்
ஊனை உருக்கும் உடையானை.........”
(திருச்சதகம்)

என்றும்,

“தேனய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்”
(திருவேசறவு)

என்றும் ஏத்துகின்ருர் மாணிக்கவாசகர்.

“தேனும், பாலும், கன்னலும்
அமுதுமாகித் தித்தித்து, என்
ஊனில், உயிரில், உணர்வினில்
நின்ற ஒன்றை உணர்ந்தேனே”
(திருவாய்மொழி 8-8-4)

என்பது நம்மாழ்வார் வாக்கு.

இறையுணர்வால் எய்தும் இன்பத்தைத் தேன் என்றும் பால் என்றும் தெவிட்டாத அமுது என்றும் பாடும் அடியார்கள் தங்கள் இறையனுபவத்தையே இவ்வாறு கூறியுள்ளனர்! பக்தி நெறிபரவும் பரமஞானிகளுக்கு இறைவன் தேனய் இனிக்கின்ருன், தெள்ள முதாய்ச் சுவைக்கின்ருன், அவர்கள் ஊனை உருக்கி உவகை பெருக்குகின்ருன்!

சிந்தனையில் ஊறும் தேன் :

“கறந்த பால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று”
(சிவபுராணம்)

இவ்வாறு, சிந்தனையில் ஊறும் தேனாக மணிவாசகர் காணும் இறைவனை,

"கருதுவார் இதயக் கமலத்து ஊறும் தேனவன் காண்"
(திருச்சிவபுரம்)

என்று நாவுக்கரசர் பாடும் பரமனை,

"ஆரா வமுதாய் அடியேன் ஆவி அகமே தித்திப்பாய்"
(5-8-10)

என்று ஏத்துகின்றார் நம்மாழ்வார்.

சிறிது நினைத்தாலும் போதும், மனத்திலே அமுதமாக இனிக்கின்றான் இறைவன் எனகிறார் மணிவாசகர்:

"சட்டோ நினைக்க மனத்தமுதாம் சங்கரனை"
(திருக்கோத்தும்பி)

எப்பொழுதெல்லாம் இறைவனை நினைக்கின்றோமோ அப்பொழுதெல்லாம் இனபம் எழுகின்றது எனகிறார் நம்மாழ்வார்:

"உருவு கரந்து உள்ளுந்தோறும் தித்திப்பான்"
(திருவாய்மொழி—8-6-3)

எல்லையில்லாத இன்பமயமான இறைவன், தன்னை நினையும் அடியார்கள் உள்ளத்தை உருக்கிவிடுகின்றான், என்கின்றனர் ஞானிகள்.

### காதலாகிக் கசிந்து உருகுதல்

நாம் எத்தனையோ பேர்களைப்பற்றி நினைக்கிறோம். ஆனால், நம் உள்ளம் உருகுவதில்லை. நாம் ஒருவரைப் பற்றி நினைக்கும் பொழுது நம் உள்ளம் உருக வேண்டுமெனில் நமக்கு அவர்மீது அளவில்லாத அன்பு இருக்கவேண்டும். அத்தகைய அன்புக்குரியவர்களை எண்ணும்பொழுதுதான் நம் இதயம் இளகுகிறது, இன்பம் பெருகுகிறது.

எனவே, அன்போடு நாம் அந்த அரும்பொருளை நினைக்கும் பொழுதுதான் நம் உள்ளம் உருகி, உவகை பொங்குகின்றது,

இந்த உண்மையினை எத்தனையோ வகைகளில் எடுத்தோதுகின்றனர் பத்திநெறி பரவும் பரமஞானிகள்:

"ஆரா அமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே,
நீராய் அலைந்து, கரைய உருக்குகின்ற நெடுமாலே!"

அன்பினால் ஆண்டவனை நினையும் பொழுது அவன் நம் உடலையும் உள்ளத்தையும் உருக்கிவிடுகிறான், என்கிறார் நம்மாழ்வார்.
(5-8-1)

"அன்பினால் உன்னை நினைந்தால், ஆவியும் உடலும் ஆனந்தமாய்க் கசிந்து உருகும்படி அருளுகின்றாய்." என்று பாடுகின்றார் மணிவாசகர்.

"அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை
ஆனந்தமாய்க் கசிந்து உருக
என்பரம் அல்லா, இன்னருள் தந்தாய்"

(22-2)

இறைவன்மீது ஈடில்லாத அன்பினால் உளம் கசிந்து கண்களில் நீர் மல்கி இறைவனின் நாமத்தை ஓதுவார்கள் உய்வார்கள் என்பது சம்பந்தர் தேவாரம்:

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
.........."

(நமச்சிவாயப்பதிகம்)

கனிந்த காதல் இன்றிக் கடவுளின் பெயரை ஓதுவதால் பயனில்லை; எனவே, காதலால் கசிந்து உருகவேண்டும் என்கிறார்.

"அன்பனே, அரனே" என்று அரற்றித் தொழுவார்க்கு இன்பன் ஆகின்றான் இறைவன், என்கிறார் நாவுக்கரசர்:

"அன்பனே அரனே என்று அரற்றுவார்க்கு
இன்பனாகும் எறும்பியூர் ஈசனே"

(திரு எறும்பியூர்)

யஜுர் வேதத்தில் துதி:

"மலையில் திரியும் பயங்கர காட்டு மிருகம் போல நீ வெகு தூரத்தினின்று எங்களை அணுகியுளாய். இந்திரனே! உன் ஆயுதம் கூரியவாளைக் கூர்மை செய்து எங்கள் சத்துருக்களைக் கொல்லவும் எங்களை வெறுப்பவர்களைத் துவம்சம் செய்யவும்."

இவ்வாறு, இந்திரனைத் துதிக்கின்றது யஜுர் வேதம்!

[M. R. சம்புநாதன் அவர்கள் மொழி பெயர்ப்பு—அநுவாகம் 384]

தெய்வங்களை அச்சமூட்டும் உருவங்களாகக் கற்பனை செய்து தம் பகைவர்களை அழிப்பதற்கு உதவும் சக்திகளாகவே வேதியர்கள் வழிபாடு செய்தார்கள்!

இறைமை ஞானம் இதயத்தில் தோன்ருத நிலையில் இயற்கையைக் கண்டு அஞ்சிய மனிதன் அச்சத்தால் வழிபட்ட வசனங்களைத் தான் வேதங்கள் ஒலிக்கின்றன!

## இன்பன், அன்பன்

ஆனல், இறைமை ஞானத்தால் இதயம் கனிந்த மெய்யடியார்கள் இறைவனை இன்பமாகக் காணுகின்றனர்: இன்பம் அளிக்கும் அன்பனுக இறைவனைக் காணும் அவர்களின் உருகிய உள்ளத்திலே உவகை பொங்குகிறது! உலப்பிலா ஆனந்தம் பெருகுகிறது!

"ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே! என்னுடை அன்பே!"

(கோயில் திருப்பதிகம்)

என்று ஓங்கி ஒலிக்கின்றது திருவாசகம்!

"கொள்ள மாளா இன்ப வெள்ளம்
கோது இல தந்திடும் என்
வள்ளலேயோ!"

(4-7-2)

என்று இன்ப வெள்ளமாக இறைவனைக் காணும் திருவாய்மொழி

"அரண் அமைந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன், தனது அன்பர்க்கு அன்பு ஆகுமே!"

(9-10-5)

என்று இறைவனை அன்பர்களுக்கெல்லாம் அன்பனுக ஆராதிக்கின்றது!

"அன்போடு உருகும் அடியார்க்கு அன்பர்"

(திரு அரசிற் கரைப்புத்தூர்)

இவ்வாறு, உருகும் அடியார்க்கு உற்ற அன்பனுக இறைவனைப்பாடும் ஞானசம்பந்தர்,

"ஆராத இன்பன், அகலாத அன்பன்,
அருள் மேவி நின்ற அரனூர்,"

(தென்முல்லை வாயில்)

என்று இறைவனை ஏத்துகின்ருர்.

ஆம்! இறைவன், ஆராத இன்பன், அகலாத அன்பன்!

இறைவனை "ஆராத இன்பனுகவும் அகலாத அன்பனுகவும்" அடியார்கள் கண்டார்கள்!

நாமும் இறைவன்மீது அகலாத அன்பு பூண்டு ஆராத இன்பம் பெற வேண்டும் என்றுதான். ஆயிரம் ஆயிரமாக அருட் பாடல்களை அருளியுள்ளனர் அடியார்கள்.

ஒருவர் மீது நமக்கு அன்பு, அதிலும் அகலாத அன்பு ஏற்பட வேண்டுமானால், அவருக்கும் நமக்கும் உள்ள உறவு நமக்குத் தெரிய வேண்டும். அவருடைய பெருமையும் தெரிய வேண்டும் எனவே, இறைவனின் ஈடிலலாத பெருமையினையும் இறைவனுக்கும் இன்னுயிர்களுக்கும் உள்ள தொடர்பினையும் உணர்த்தும் வகையில் ஒப்பற்ற பாடல்களை ஒண்தமிழில் ஓதியுள்ளனர் நாயன்மார்களும் ஆழ்வார்களும்.

அவர்கள் அருளியுள்ள தமிழ்மாலைகளிலே ஒளிரும் இறைமை ஞானம் ஓர்ந்து ஓர்ந்து காணும் நம் உள்ளத்தை எவ்வாறு உயர்த்துகிறது எனக் காண்போம்!

(தொடரும்)

---

## தமிழ் மரபைத் தழைக்கச் செய்தவர்

சமயத் துறை ஆரியர்களின் மரபுகளிலே ஆழ்ந்து விடாமல் ஆரியத்தை எதிர்த்துத் தடுத்தவர்கள் சைவ, வைணவ சமயத்தைச் சார்ந்து பக்தி நெறி பரப்பிய தெய்வீகக் கவிகள் ஆவர். அவர்களால் தமிழ்ப் பண்பாட்டு மரபு மீண்டும் தழைத்தது.

—ஜுடித் ஜி. மார்ட்டின்:
அமெரிக்காவிலுள்ள டேட்டன் பல்கலைக் கழகத்தில்
உதவிப் பேராசிரியர்.

The process of Aryanisation did not go unchecked, however. It was continuously being challenged and counter balanced by an equally cynamic move by Saiva and Vaisnava 'bhakthi' poets to revive the Tamil Cultural tradition

Pandith G. Martin S. S. J. Assistant professor of World Religions, University of Dayton, Chio, U. S. A. in Tirumalar and the Tamilizing of Saivisim p 141 In spirit and in Truth, Aikiya Alayanm, Madras, 1985.

# வாழ்க சிலம்புச் செல்வர்

''நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று''

என்னும் பொய்யா மொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது. சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ, சிவஞானம் அவர்களின் வாழ்க்கை எனில் மிகையன்று.



கடந்த 26-6-85ல் தமது 80ஆவது அகவையில் அடியெடுத்து வைத்த நம் மதிப்பிற்குரிய சிலம்புச் செல்வர், முனைவர் (டாக்டர்) ம. பொ. சிவ ஞானம் அவர்களின் வாழ்க்கை வருங்கால இளைஞர்கட்கு நல்லதொரு முன் போலிகையாகும.

திரு. ம. பொ, சி. அவர்கள் இயற்கையாகவே முயற்சியும் அறிவுக் கூர்மையும் உடையவர். அத்தகை யவருக்கு மேலே சுட்டிக் காட்டியபடி நா நலமும் கூடியதால் அ∴துஅவரைப் புகழேணியின் உச்சத்தில் கொண்டுவந்து விட்டது. தம்மிடம் பொதிந்து கிடந்த பேச்சாற்றலையும் எழுத்தாற் றலையும் தக்கபடி பயன்படுத்தி அரசியல் இலக்கியம் ஆகிய துறை களில் முனைந்து முன்னேறியவர் இவர்.

நாட்டு விடுதலைப் போரில் பங்கு கொண்டு, அதில் தமது நாவன்மையை முன்வைத்துப் பேராயக் கட்சிக்கு (காங்கிரசுக்கு) வெற்றி தேடித் தந்தவர் இவர் எனில் மிகையன்று, அந்த நாளில் ஆங்கிலமும் கொச்சைத் தமிழுமேயன்றி நயமான தமிழ்ப் பேச்சாளர்கள் இல்லாத காரணத்தால் அக் குழுவில் நல்ல தமிழில் சொலல் வல்லராய்-சோர்விலராய்-நிரல்படத் தம் கருத்துகளை மக்களிடையே எடுத்துக் கூறி இகல்வெல்லும் ஆற்றலைப் பெற்றிருந் தார் இவர், ஆனால் இவரைப் பயன்படுத்தும் அளவிற்குப் பயன் படுத்தத் தவறிவிட்டது பேராயக் கட்சி.

எனவே, தமது தேசிய உணர்வையும், தமிழ் உணர்வையும் முதன்மையாக்கித் தமக்கென ஒரு தலைமையினையும், கட்சியினையும் அமைத்துக் கொண்டார் ம. பொ. சி. அதுதான் தமிழரசுக் கழகம்,

தேசியம் - ஒருமைப்பாடு - இவை சிலம்புச் செல்வரின் உயிர் மூச்சுகளாகும். அத்துடன் தமிழுணர்வும் கூடியதால் இவர் பெருந்

தலைவர்களால் பாராட்டப் பெற்ருர். சிலப்பதிகாரம்பற்றியும் பிற தமிழ் இலக்கியங்கள்பற்றியும் பேசுவது அக்காலப் பேராயக்கட்சியின் போக்கிற்கு அப்பாற்பட்டதாய் இருந்தபோது, இவர் அவற்றையே பெரிதும் போற்றி வந்தமையால் தமிழன்பர்களும் தேசியவாதி களும் இணைந்து இவரைப் பாராட்டத்துவங்கினர். மேலும் தமிழக எல்லைப் போரில் இவர் பெற்ற வெற்றி இவரை மேலும் உயர்த்திற்று.

இவர் எந்தக் கொள்கையை ஆதரித்தாலும் அதற்கேற்பத் தமது வாதங்களை வகுத்தும் பகுத்தும் எடுத்தியம்பும் ஆற்றல் பெற்றவர். இடம் பொருள் ஏவல் அறிந்து பேசும் நுண்மாண் நுழைபுலம் மிக் கவர். எனவேதான் புரட்சித் தலைவரவர்கள் இவரைப் போற்றிப் புகழ்ந்து புரந்து வருகிருர். இவர்தம் இலக்கிய அறிவினையும் பிற ஆற்றல்களையும் அறிந்தே சென்னைப் பல்கலைக்கழகமும், அண்ணுமலைப்பல்கலைக் கழகமும் இவருக்கு முனைவர் பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளன.

செங்கோல் இதழ்மூலம் இவர் உருவாக்கிய அரசியல் இலக்கிய நூல்கள் மிகப் பல. அவையே இவருக்கு முனைவர் பட்டத்தினைக் கொணர்ந்து சேர்த்தன எனில் மிகையன்று. இதுகாறும் இவர் எழுதி வெளியிட்ட நூல்கள் 127.

இங்ஙனம் பல்துறை ஆற்றல்கள் கைவரப்பெற்ற சிலம்புச் செல்வர் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடனும் வளமுடனும் வாழ்ந்து, வளமான இலக்கியங்களைப் படைத்து நாட்டுக்கும் மொழிக்கும் தொண்டாற்ற வேண்டுமென வாழ்த்துகிருேம்.

---

## காலணியில் கணிப்பொறி

அதிதாஸ், பூமா ஆகிய வணிகக் கம்பெனிகள் காலணிகளில் (shoe) கணிப் பொறியைப் பொருத்தி விந்தை புரியத் தொடங்கி யுள்ளன. இவை, குறிப்பாக ஓட்டப் பந்தயக்காரர்களுக்கு உதவும் அவர்கள் அணியும் காலணியின் மேலுறையில் கடிகார அளவிலான இந்தக் கணிப்பொறி பொருத்தப்படும். அதிலிருந்து ஒரு மின் கம்பி (wire) காலணியின் அடியிலுள்ள பகுதியில் இணைக்கப் பட்டிருக் கும். ஓட்டக்காரர் தாம் ஓடவிரும்பும் தூரம், தமது எடையின் அளவு முதலியவற்றைக் கணிப்பொறியில் குறித்து விட்டு ஓடத் தொடங்க வேண்டும். அவர் எவ்வளவு தூரம் ஓடியிருக்கிருர், இன்னும் ஓட வேண்டிய தூரம் எவ்வளவு, சராசரி ஓட்ட நேரம் என்ன, எவ்வளவு கலோரி செலவாகியுள்ளது முதலிய விவரங்களை இந்தக் கணிப்பொறி மூலம் தெரிந்து கொள்ளலாம். இதன் விலை ரூபா 1500முதல்2400-க்குள் அடங்கும்.

நன்றி : அறிவியல் பன்னை, தமிழ்ப் பல்கலைக் கழகம்.

# பொருத்தமுள்ள துணைவேந்தர்

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகத் திருவாட்டி இராதா தியாகராசன் அவர்கள் அமர்த்தப்பெற்றுள்ளார் என்ற செய்தியறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைகிறோம்.

இப்போது திருவாட்டி இராதா தியாகராசன் அவர்கள் துணைவேந்தராக அமர்த்தப் பெற்றிருப்பதால் அப்பல்கலைக் கழகத்தின் மாண்பு உயருகிறது. ஏனெனில் அம்மையார் ஒரு துணை வேந்தர்க்குரிய தகுதிகள் அனைத்தும் வாய்க்கப்பெற்றவர். முன்னரே கல்விநிலையங்கள் சிலவற்றைத் திறம்பட நடத்திய திறலினர். அத்துடன் தமிழில் சிறந்த புலமையும், பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் கைவரப்பெற்று முனைவர் (டாக்டர்) பட்டமும் பெற்றவர். இவர்கள் முனைவர் பட்டம் பெறுவதற்குத் திருவாசகத்தை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டமை, இவர்தம் செந்தமிழ்ப்பற்றுக்கும் சிவநெறிப்பற்றுக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகும்,

ஆடவர் பயிலும் பல்கலைக் கழகங்கட்கு ஆடவரும், பெண்டிர் பயிலும் பல்கலைக் கழகங்கட்குப் பெண்டிரும் துணைவேந்தர்களாக அமர்த்தப் பெறுதலே மரபாக இருந்து வருகிறது. ஆனால் ஆடவரும் பெண்டிரும் ஒருங்கிருந்து பயிலும் இப் பல்கலைக் கழகத்திற்கு அம்மையார் துணைவேந்தராக அமைந்தமை ஒரு தனிச்சிறப்பாகும்.

செல்வக் குடியிற் புகுந்து, செல்வ வளமும் கல்வி வளமும் ஒருங்கே பெற்ற அம்மையாரின் தலைமையில் அழகப்பா பல்கலைக் கழகம் பல்லாற்றானும் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை.

திருவாட்டி இராதா அம்மையார் அவர்கள் நம் கழகத்திடம் பற்றும் தொடர்பும் கொண்டவர், கழகம் நடத்திய மாநாடுகளில் பங்கு பெற்று உரையாற்றியவர் என்பன ஈண்டுக் குறிப்பிடத் தக்கவை. இத்தகைய நல்லாரை,

> "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
> அதனை அவன்கண் விடல்"

என்னும் பொய்யா மொழிக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்த தமிழக அரசினைப் பாராட்டுகிறோம். துணைவேந்தர் இராதா தியாகராசன் அவர்கள் வாழ்க! அவர்தம் கல்விப் பணிகள் சிறக்க என வாழ்த்துகிறோம்.

———

# குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

(முன் இதழ் சகக ஆம் பக்கத் தொடர்ச்சி)

குறிஞ்சிப்பாட்டைக் கூர்ந்து படித்தால் திணைப் பாகுபாட்டை முற்றிலும் புறக்கணித்துப்பாடப்பட்டிருப்பது தெரிகின்றது. பாலையில் வாழும் செடியை நெய்தலோடு சேர்த்தும், நெய்தலில் வாழும் செடியை குறிஞ்சியில் வளரும் மரத்துடன் செடியு ன் சேர்த்தும் பாடியிருப்பதைக் காணலாம். பயினி என்ற மலைவாழ் மரத்தை முல்லைக்குரிய வகுளத்தோடு சேர்த்துக் கூறியுள்ளார். குறிஞ்சிக் குரிய பசும்பிடியை மருதத்திற்குரிய வகுளத்தோடு சேர்த்துப் பாடி யுள்ளார், நெய்தற்குரிய புன்னையைப் பாலைக்குரிய பாலை மரத்தோடு சேர்த்துப் பாடியது திணைப் பாகுபாடாகாது. தில்லை. கடற்கரை யோரங்களில் சதுப்பு நிலத்தில் காணப்படுவது. பாலை வறடசியான நிலத்தில் காணப்படுவது. முற்றிலும் முரணான திணைக்குரிய மரங்களைச் சேர்த்துக் கூறியிருப்பது தெளிவாகத் தெரிகின்றது. இது போன்று கருப்பொருள் திணைப்பாகுபாடு இன்றியே மரஞ்செடி கொடிகள் கூறப்பட்டிருக்கின்றன. மோனை, எதுகை ஓசை நயத் திற்காகத் திணைப்பாகுபாட்டை மீறிப் பாடியுள்ளார். 73, 74ஆம் வரியும் 87லிருந்து 96 ஆம்வரி வரை அவ்வாறு ஓசை நயத்திற்காகத் திணைப் பாகுபாட்டை மீறிப்பாடியுள்ளார். இவைகளைத் திணைமயக்கம் என்று கூறவே முடியாது. குறிஞ்சியும் முல்லையும் வறட்சியால் பாலைத் தன்மை அடைவதே திணைமயக்கம் கூறும் இயற்கையான செய்தியாகும் அவ்வாறன்றி நெய்தற்குரிய மரததைப் பாலை மரத்தொடு சேர்த்தும் அதுபோன்று பிற திணைகளில் சேர்த்தும் கூறியமையைத் திணைமயக்கம் என்று கூற முடியாது அப்படி யென்றால் ஏன் திணைப்பாகுபாட்டை மீறிப் பாடினார் என்ற கேள்வி எழுகின்றது? தமிழ்நாட்டில் காணப்பட்ட 99 தாவரங்களின் பெயர்களைக் குறிப்பிடவேயாகும் என்று கருத வேண்டும் குறிஞ்சிப் பாட்டு ஆரிய அரசனான பிரகத்தனுக்குத் தமிழைச் சொல்லிக் கொடுக்கப் பாடியதாகும். ஆதலின் அகத்திணையாகிய களவைக் கூறியதுடன் தமிழநாட்டில் உள்ள தெரிந்த மரஞ்செடிகொடி களின் பெயர்களைத் தொகுத்து ஆரிய அரசனுக்குக் கூறியதாகத் தெரிகின்றது.

மற்றும் சில இடங்களில் தமிழ்ப் பெயர் இருக்க வடமொழிப் பெயரைச் சில செடிகொடி மரங்களுக்குக் கூறியுள்ளார், செயலை என்பதற்குப் பிண்டியையும் நொச்சி என்பதற்குச் சிந்துவாரம் என்றும் முருக்கு என்பதற்குப் பலாசமும் இலஞ்சி மகிழம் என்பதற்கு வகுளம் என்றும் கூறியுள்ளார். அசோக மரத்திற்குச் செயலை என்ற தூய தமிழ்ப் பெயரைப் பின்னர் 105ஆம் வரியில் கூறியிருக்கும்போது பிண்டியை ஏன் முன்னர்க்கூறினார் என்பது தெரியவில்லை. தமிழ்ப் பெயர்கள் இருக்க வடமொழிப் பெயர்களை ஏன் பயன்படுத்தினார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் செங்கொடுவேரி மணிச்சிகை, கூவிரம், எறுழம், வாணி, வடவனம், குரீஇப் பூளை கொகுடி, சேடல், செம்மல், செங்குரலி, சுள்ளி, தணக்கம், நந்தி நள்ளிருள்நாறி, புழகு ஆகிய பெயர்கள் சங்கநூல்களில் குறிஞ்சிப் பாட்டில் மட்டும்தான் வழங்கியுள்ளன: மரப் பெயர்கள் எவ்வளவு தர முடியுமோ அவ்வளவையும் தர முயன்றுள்ளார் என்று தெரிகின்றது.

உரையாசிரியர் குறிஞ்சிப்பாட்டில் வரும் எல்லாச் செடிகொடி மரங்களும் அழகிய பூக்களையுடையவை என்று கூறியுள்ளார், அது தவறு; தென்னை, மா, சூரை, மூங்கில் போன்ற பல மரங்கள் அழகிய பூககளை உடையன அல்ல, நறுமணம் உடையனவும் அல்ல. மல்லிகைகளில் நான்கு, ஐந்து வகைகளைக் கூறியுள்ளார்.

கபிலர் பாடிய ஏனைய சங்கநூற் பாடல்களில் இவ்வாறு திணைப் பாகுபாட்டை மீறிச் செய்யுள் செய்யவில்லை. அப்படி யிருக்க குறிஞ்சிப்பாட்டைப் பாடிய கபிலரும் சங்கநூல்களில் பாட்டுகள் இயற்றிய கபிலரும் ஒருவரா என்ற ஐயம் எழுகின்றது தொல் கபிலர் என்ற வழக்கு உள்ளது. ஆதலின் சங்கநூற் பாடல் களைப் பாடிய கபிலர் தொல் கபிலராகவும் குறிஞ்சிப்பாட்டைப் பாடி யவர் கபிலராகவும் இருந்திருக்கலாம்.

குறிஞ்சிப்பாட்டில் 99 தாவரங்கள் கூறப்பட்டதாகத் தெரி கின்றது. ஆனால், கபிலர் 100 தாவரங்களைப் பாடியிருக்கலாம் என்று கருத வேண்டியுள்ளது. நூறு தாவரங்களின் பெயர்களைத் தெரிந்து கொள்ளவே திணைப் பாகுபாட்டை மீறிப் பாடினார் என்று கொள்ளலாம். ஆனால் தொண்ணூற்று ஒன்பதையே உரையாசிரியர் கூறியுள்ளார். இறையனார் அகப்பொருளில் தலைவன் தலைவியைச் சந்திகும் இடத்தில் எல்லா வகை அழகிய பூக்களையுடைய தாவரங்களையும் திணைப்பாகுபாடின்றிக் கூறியதுபோலவே குறிஞ்சிப் பாட்டும் கூறியுள்ளதாகத் தெரிகின்றது. ஆயினும் இத்தகைய

தாவரப் பெயர்த் தொகுதியை சங்ககாலத்தில் வேறு எந்த நாட்டு இலக்கியத்திலும் காணமுடியவில்லை. அதுவே குறிஞ்சிப்பாட்டின் ஒப்பரிய சிறப்பாகும்.

## மேற்கோள் நூல்கள்


1. ஐங்குறுநூறு
2. அகநானூறு (அகம்)
3. குறுந்தொகை
4. நற்றிணை
5. புறநானூறு (புறம்)
6. கலித்தொகை (கலி)
7. பதிற்றுப்பத்து
8. குறிஞ்சிப் பாட்டு
9. சிறுபாணாற்றுப்படை
10. பெரும்பாணாற்றுப்படை
11. திருமுருகாற்றுப்படை
12. முல்லைப்பாட்டு
13. மதுரைக்காஞ்சி
14. மலைபடுகடாம்
15. திணைமாலை
16. திணைமொழி
17. ஐந்திணை
18. பரிபாடல்
19. மணிமேகலை
20. சிலப்பதிகாரம்
21. சிந்தாமணி
22. திருக்குறள்
23. தேவாரம்
24. சென்னைப் பல்கலைக் கழக அகராதி.


## REFERENCES


A CHART, A. Dj : Quinze cents plantes.

BLATTER, E and MILLARD, W. S. : Some Beautiful Indian Trees, Bombay Natural History Society.

BORN. L. : Manual of Indian Forest Botany, Oxford University Press.

BOURDILLON, T. F. : The Forest Trees of Travancore.

CHOPRA, R. W., CHOPARA, J. C. and NAYAR, S. C. Glossary of Indian Medicinal plants, 1966. CSIT: NEW DELHI.

COWEN, D .V.: Flowering trees and shrubs in India· Thacker & Co. Ltd.,

GAMBLE, J. S.: Fiora of the presidency of Madras, Botanical Survey of India, A Manual of Indian Timbers.

JAKHTAJAN, ARMENT AND JEFFRY, C.: Flowering Plants (Origin and dispersal) Orient Longmans, Madras.

LUSHINGTON, A.W.: Vernacular list of Trees, shrubs and woody Climbers in Madras Presidency, Vol. II-3,

RANDHAWA, M. S.: Flowering Trees in India, ICAR, New Delhi.

SESHAGIRI RAO, V. N. AND KRISHNASWAMY, M.A.: List of more important trees, shrubs, climbers and Herbs occurring in the forests of Msdras presidency with their local names, superintendent of Government Press, Madras-1984.

SUBRAMANYAM, K: Aquatic Angiosperms

SWARUB, VISANU, Dr: Gardon Flowers, National Book Trust.

Coimbatore District Gazetter (Revised), Superintendent of Government Press, Madras.

Madurai District Gazetteer (Revised), Superintendent of Government Preess, Madras.

Materia Medica (Vegetable Section), Madras Government Publication, Pharmacognoxy of Ayurvedic drugs, Kerala (Series 1 No: 3).

1. செங்காந்தள் Gloriosa superba
2. ஆம்பல் Nyphaea lotus
3. அனிச்சம் Anagallis Aravensis
4. குவளை Nymphaea Rubra

5. குறிஞ்சி Strobilanthus Kunthianus
6. வெட்சி Ixora Coccinia
7. செங்கோடுவேரி Plumbago Rosea
8. தேமா Manigfera Indica (cultivated)
9. மணிச்சிகை Ipomea Sepiara
10. உந்தூழ் (முந்தூழ்) Bombusa Arundinaceae
11. கூவிளம் Aegle Marmelos
12. எறுழம் .........?
13. சுள்ளி Barleria prionitis
14. கூவிரம் Crateava religiosa
15. வடவனம் Ocimum grattissimus
16. வாகை Albizzia lebbek
17. குடசம் Hollarhena antidysentrica
18. எருவை Typha angustata
19. செருவிளை Clitora ternata (white flowers)
20. கருவிளை Clitoria ternata (Blue flowes)
21. பயினி Vateria Indica
22. வானி Enonynus dichotomous
23. குரவம் Webera Corymbosa
24. வகுளம் Garcinia Xanthochymus
25. பசும்பிடி Mimosops elengi
26. காயா Mameclon edule
27. ஆவிரை Cassia auriculata
28. வேரல் Arundunaria wightlana
29. சூரல் Zizhyphus oenofolia
30. குரீஇப்பூளை Aerua lanata
31. குறுநறுங்கண்ணி Abrus precatortious
32. குறுகிலை (முருக்கு இலை) Butea Frondosa
33. மருதம் Legerstromia flos.regina
34. கோங்கம் Cochlospermum gossypium
35. போங்கம் osmosia travancorica
36. திலகம் Adenantera pavononia
37. பாதிரி Stereosphermum chelonoides
38. செருந்தி Ochna squrrosa

| | | |
|---|---|---|
| 39. | அதிரல் | Derris scandens |
| 40. | சண்பகம் | Michelia champaca |
| 41. | கரந்தை | Sparathes amaranthoides |
| 42. | குளவி | Pogostemon vestitum |
| 43. | கலிமா | Mangifera Indica (wild) |
| 44. | தில்லை | Excoecaria Agallocha |
| 45. | பாலை | Wrightia tinctoria |
| 46. | முல்லை | Jasminium auriculatum |
| 47. | குல்லை | Cannabis sativa |
| 48. | பிடவம் | Randia malabarica |
| 49. | சிறுமரோடம் | Acacia sundra |
| 50. | வாழை | Musa superba |
| 51. | வள்ளி | Dioscoridae |
| 52. | நெய்தல் | Nymphaea stellata |
| 53. | தென்னை | Cocos nucifera |
| 54. | தவளம் | Jasminium Rubescens |
| 55. | தாமரை | Nelumbium speciosa |
| 56. | ஞாழல் | Heritiara littoralis |
| 57. | மவ்வல் | Jasminium officinalis |
| 58. | கொகுடி | Jasminium Bignonacea? |
| 59. | சேடல் | Nyctanthus arbortristis |
| 60. | செம்மல் | Jasminum grandiflorum |
| 61. | செங்குரலி | Trapa bispinosa? |
| 62. | கைதை | Pandanus Odoratissimus |
| 63. | கோடல் | Glosiosa suberbba Variety |
| 64. | வழை | Ochrocarpus longifolius |
| 65. | காஞ்சி | Trawia nudiflora |
| 66. | நொய்தல் | Nymphaea stellata |
| 67. | பாங்கர் | Hardwickia pinata? |
| 68. | மராம் | Shorea talura or shorea thumburgia? |
| 69. | தணக்கு | Gynocarpus communis |
| 70. | ஈங்கை | Acacia caesia |
| 71. | இலவம் | Bombax malabarica |

*

72. கொன்றை Cassia fistula
73. அடும்பு Ipomea pescppra
74. ஆத்தி Bauhinia recemosa
75. அவரை Dolichos lab-lab
76. பகன்றை Operclunia turpethum
77. பலாசம் Butea frondosa
78. பிண்டி Saraca Indica
79. வஞ்சி Salix tetrasperma
80. பித்திகம் Jasminum Angustifolium
81. சிந்துவாரம் Vitex Neguna
82. தும்பை Leucus aspera
83. துழாய் Ocimum sanctum
84. தோன்றி Gloriosx superba variety
85. நந்தி Tabernemontana Coronaria
86. நறவம் Lavunga scandens
87. புன்னாகம் Colophyllumelata
88. பாரம் Gossipium herbaceum
89. பீரம் Luffa actunagula
90. குறுக்கத்தி Hiptage Madablata
91. ஆரம் Santalum album
92. காழ்வை Dysozylum malabaricum
93. புன்னை Colophyllum inophyllum
94. நரந்தம் Cymbopogon nardus
95. நள்ளிருள்நாறி Jasminum sambac
96. நாகம் Mesua ferrea
97. இருங்குருந்து Atlantis spinosa
98. வேங்கை Pterocarpus marsupium
99. புழகு Caltropis gigantia?

———

# எது முன்னே?

[ஆட்சிச்சொற்காவலர் கீ. இராமலிங்கனர் எம். ஏ.]

''தமிழ் மணம்''—சென்னை-30

நமது நாட்டின் தலையாய மொழிகள் இரண்டு; தமிழும் வட மொழியும். இவ்விரண்டுமே நம் நாட்டினர் அனைவரும் போற்ற வேண்டிய மொழிகள். இவற்றுள் தமிழ் எப்போது தோன்றியது என்று சொல்வதற்கில்லை, அத்துணைப் பழைய மொழி தமிழ். ஓர் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, நமது நாடு முழுதும் பரவியிருந்த மொழி இது. மொகஞ்செதாரோ, ஆரப்பாவில் அகழ்ந்து எடுக்கப் பட்ட எழுத்து வடிவங்கள் இதற்குச் சான்று பகரும்.

இந்திய நாட்டுக்குத் தெற்கேயுள்ள கடற்பகுதி, பன்னெடுங் காலத்துக்கு முன்பு, நிலமாக இருந்தது என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். இந்நிலப்பகுதியைக் 'குமரிககண்டம்' என்பர். இஃது 'இலெமூரியா' என்றும் குறிக்கப்பெற்றது 'இலெமுரியா' கண்டம், சிறிது சிறிதாகக் கடலாற் கொள்ளப்பட்டபோது அங்கு வாழ்ந்த மக்கள் வடக்கே நகர்ந்து இந்தியத் தென்னாட்டுப்பகுதியில் ஏற்கெனவே இருந்த மக்களுடன் வந்து கூடினர். இருவகை மக்களும் தமிழர்களின் முன்னோர் என்று ஆய்வாளர் கூறுவர்.

இதற்கும் வடக்கே, விந்திய மலைக்கும் அப்பால், அப்போது கடலாக இருந்த பகுதி குமரிக் கண்டம் கடல் கொள்ளப்பட்ட காலத்தில் நிலமாயிற்று. இந்திய வடபகுதியிலுள்ள மணல் பரப்பு முன்பு அது கடலாக இருந்ததற்குச் சான்றாகும். இமயமலையில் 'திமிங்கிலம்' போன்ற கடல்வாழ் உயிர்களின் எலும்புக்கூடுகள் காணப்படுவதும் உறுதியானதொரு சான்றாகும்.

கடலாக இருந்த வடநாடு நிலமானபோது அங்கும் தமிழ் மொழி பேசும் மக்கள் பரவினர். ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வழங்கிய அந்தத் தமிழ்மொழியின் முன்னை வடிவமே, மொகஞ்செ தாரோ ஆரப்பாவில் காணப்படுவதாகும். அன்று நமது நாட்டில் வேறு எந்த மொழியுமே இல்லை. இன்றும் வடநாட்டு, மலைக்குகைப் பகுதிகளில் வாழும் மககள் பேசிவரும் மொழிக்கும் தமிழ் மொழிக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதை, ஆராய்ச்சியாளர்கள் கண்டு கூறுகின்றனர்.

கடலின் கீழிருந்த வட இந்தியப்பகுதி நிலமான பிறகு, மத்திய ஆசியாவிலிருந்த மக்கள் கூட்டம் கூட்டமாக இமயமலை வழியாக, வடஇந்தியாவில் குடிபுகுந்தனர். இவர்கள் தம்மை 'ஆரியர்' என்று சொல்லிக்கொண்டனர். இது 'மொகஞ்செதாரோ, ஆரப்பா காலமாக இருக்கலாம். ஏறத்தாழ ஐயாயிரம், ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அவர்கள் ஏதோ ஒரு மொழி பேசினர்.

அதற்கு என்ன பெயர் என்று தெரியவில்லை. அதுபேச்சு மொழியேயாகும்; எழுத்துவடிவு அதற்கு இல்லை. இயற்கையை, 'இந்திரன்' 'வருணன்' என்னும் பெயர்களால் அந்த ஆரியர் வழிபட்டு வந்தனர் சூரியனையும் தொழுதனர். காயத்திரி மந்திரம் என்பது சூரியனை வழுத்தும் பாடற்பகுதியாகும்.

இவ் வழிபாட்டுப் பாடல்களை, அவர்கள் தமிழர்களோடு தொடர்பு கொண்டபிறகு. வேதம், வேதம் என்று சொல்ல லாயினர். வித்து, விதை என்னும் தமிழ்ச்சொல்லிலிருந்து ஆக்கப்பட்டதே வேதம் என்னும் சொல். வாய்வழியாகவே கற்பித்து வந்த அத் தொழுகைப் பாடல்களான 'வேதம்' எழுதாக் கிளவி எனப்பட்டது. தமிழர்களின் மெய்யியற் கொள்கைகளை [தத்துவங்களை] சிறிது சிறிதாக அவ் வேதத்தினில் அவர்கள் பேசிய மொழியில் செய்து சேர்த்துக்கொண்டனர்.

இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, ஆரியர்கள் எனப்பட்ட மக்கள் தாம் பேசிவந்த மொழிக்கு, எழுத்து வடிவம் கற்பித்துக்கொண்டனர். அது மத்திய ஆசியாவிலிருந்து கொண்டு வந்ததும் பேச்சு வழக்கில் மட்டும் இருந்ததுமான சிறிய மொழி யுடன், தமிழையும், தமிழின் சிதைவு மொழிகளையும், அப்போது வழக்குக்கு வந்துவிட்டிருந்த 'பாலி' 'பிராக்கிருதம்' என்பவற் றையும் பார்த்து ஒரு புது மொழியைச் செய்துகொண்டனர். அதற்கு 'சமஸ்கிருதம்' என்று பெயர். அதன் பொருள் ''சேர்த்துச் செய்து கொள்ளப்பட்டது'' செம்மையாகச் செய்து கொள்ளப் பட்டது''. என்பதேயாகும். பேராசிரியர் சுனீத்குமார் சட்டர்ஜி என்னும் வங்காள வடமொழி வல்லுநரால் இவ்வாறு செய்து கொள்ளப்பட்டது. இன்றைக்கு 3500 ஆண்டுகளுக்கு முன்பு என்று கூறுகிறார். எனவே 3500 ஆண்டுகளுக்கு முனனே 'சமஸ் கிருத்' என்று ஒருமொழி இல்லை என்பது தெளிவு.

இச் செய்திகளால் 'சமஸ்கிருத' மொழி என்பது இயல்பாகத் தோன்றிய மொழியாகிய தமிழ்மொழி வழங்கி வந்த காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு இப்பால், செய்துகொள்ளப்பட்டது என்பதை நன்கு அறிகிறோம். அங்ஙனம் செய்துகொள்வதற்குப் பெரும்பாலான வேர்களை அளித்த மொழி தமிழேயாகும் என்பது

வெள்ளிடைமலை. இந்த உண்மையை எளிதில் தெரிந்து கொள்ளும் வகையில் பல வடசொற்கள் அமைந்திருக்கின்றன. இதோ சில சொற்களைப்பாருங்கள்.

'வேதம்'—வித்து விதை இவை பழந்தமிழ்ச் சொற்கள். அறிவுக்கு வித்தாக விதையாக இருக்கும் செய்திகளைக் கொண்டது தான் வேதம். நல்ல தமிழ்ச் சொல் இது. நிலத்தில் முதன் முதலில், உண்பொருள்களை விளைவித்தவன் தமிழன்.

இன்றும் தமிழுக்கும் வேளாண்மைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பயிர்த்தொழிலைச் செய்வது இழிவானது என்று தமிழன் கூறுவதில்லை.

> ''உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்,
> பழுதுண்டு வேறோர் பணிக்கு''

என்பது தமிழ் வேதம். வேதம் என்பது வடசொல் ஆகும். அதைக் கண்ட பிறகே, அதிலிருந்து பயிர்த்தொழிலுக்கு அடிப் படையான 'வித்து,' 'விதை' என்னும் சொற்களைத் தமிழன் அறிந்து கொண்டான். பிறகே பயிர்த்தொழிலில் ஈடுபட்டான் என்பது, விந்தையினும் விந்தையான பேச்சாகும் !

'இராத்திரி'—இரா என்னும் தமிழ்ச்சொல்லிலிருந்து 'இராத்திரி என்னும் வடசொல் ஆக்கிக் கொள்ளப்பெற்றது. பகலவன் (சூரியன்) இருக்கும் நேரம் (பகல்). ஒரு நாளை இரண்டாகப் பகுப்பவன் பகலவன். 'பகலவன்' இல்லாத நேரம் இரா, இரவு ஆகிறது. 'இரவு' என்னும் தமிழ்ச்சொல் வடமொழியில் 'இராத்திரி' யாயிருக்கிறது.

'முஷ்டி'—விரல்களை மூடுதலால் காண்பது முட்டி - முட்டுதல் முட்டி. இது வடமொழியில் 'முஷ்டி' ஆயிற்று.

'பிரவளம்' 'பவழம்' என்னும் தமிழ்ச் சொல் 'பவளமாகி' இது வடமொழியில் 'பிரவளம்' ஆய்விட்டது ஆரியர்கள் என்னும் மக்கள் முதலில் வாழ்ந்த மத்திய ஆசியாவில் 'பவழம்' அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் கடலையே அறியாதவர்கள் இந்தியாவுக்கு வந்துவிட்ட பிறகும் கடலில் பயணம் செய்வதே. குற்றமான செயல் என்பது அவர்கள் கருத்து. சர். சி பி. இராமசாமி ஐயர் அவர்கள் முதலில் இங்கிலாந்துக்குச் சென்ற போது அவரை 'ஜாதிப்பிரஷ்டம்' செய்ய வேண்டும் என்னும் கிளர்ச்சியிருந்ததை நான் நேரில் அறிவேன்.

இங்கிலையில் பிரவளம் என்னும் சொல்லை ஆக்குவதற்கு வேராக இருப்பது 'பவழம்' என்னும் தமிழ்ச் சொல்லே.

(தொடரும்)

# செய்திகள்

## முனைவர் ம. பொ. சி. அவர்களின் 80. ஆவது பிறந்த நாள் விழா

தமிழக சட்டமன்ற மேலவைத் தலைவரும் தமிழரசுக் கட்சித் தலைவருமான சிலம்புச் செல்வர் முனைவர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்களின் 80-ஆவது பிறந்த நாள் விழா 26-6-85 அன்று சென்னைக் கலைவாணர் அரங்கில் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தமிழக முதல்வர், மாண்புமிகு முனைவர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் விழாவிற்குத் தலைமை ஏற்றார். மைய அரசு சமுதாய நலத்துறை அமைச்சர் திருமதி மரகதம் சந்திரசேகர் திரு. ம. பொ. சி. அவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். 'தோழர் சிங்காரவேலரின் வீரவாழ்க்கை' 'இலக்கியங்களிலே இனசமயக் கலப்புகள்' ஆகிய ம. பொ. சியின் இருநூல்களையும், திரு. பெ சு. மணி எழுதிய 'தடைகளை வென்று தலைமை பெற்ற ம. பொ சி' என்னும் நூலினையும் மாண்புமிகு அமைச்சர் இராம வீரப்பன் அவர்கள் வெளியிட்டார். மாண்புமிகு அமைச்சர் க. இராசாராம், மாண்புமிகு பி. எச். பாண்டியன், மற்றும் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களும், பெருமக்கள் பலரும் பாராட்டுரை வழங்கினர்.

சிலம்புச்செல்வரின் 80 ஆவது பிறந்த நாளையொட்டி அவருக்கு புரட்சித்தலைவரவர்கள் 80 ஆயிரம் ரூபா வழங்கியுள்ளார். என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது!

## தவத்திரு. குன்றக்குடி அடிகளார் மணிவிழா

தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் மணிவிழா, சூலை 7, 8 ஆம் நாட்களில் குன்றக்குடியில் மிகச் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தவத்திரு இராமசாமி அடிகளார் வரவேற்புரை நிகழ்த்தினார்: மயிலம் தவத்திரு. சிவஞானபாலைய அடிகளார் தலைமை ஏற்றார். தவத்திரு. சுந்தர சுவாமிகள் தொடக்கவுரை ஆற்றினார். பெருமக்கள் பலர் சிறப்புரை ஆற்றினர் இம் மணிவிழாவினையொட்டித் திருவள்ளுவர், அப்பரடிகள், மெய்கண்டார், திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர், அருள்நெறித்தந்தை ஆகியோரின் திருவுருவப் படங்கள் முறையே முத்தமிழ்க் காவலர், திரு இரா. இராசசேகரன். பி. எசி. முனைவர் ச. வே. சுப்பிரமணியம். கா அரு.கா.காடப்பச் செட்டியார். ஜெ. பாலசுந்தரம் ஆகியோரால் திறந்து வைக்கப் பெற்றன. மாண்புமிகு அமைச்சர்கள் நாவலர் நெடுஞ்செழியன், 'இராம வீரப்பன், ஆர். சௌந்திரராஜன், க. இராசாராம, கே. ஏ. கிருஷ்ணசாமி, கா காளிமுத்து

எஸ். மூத்துச்சாமி, வீராச்சாமி, எஸ், ஆர். இராமச்சந்திரன் ஆனூர் ஜெகதீசன், டி. இராமசாமி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

மற்றும் கருத்தரங்கம், நூல் வெளியீடு, இசை அரங்கு, நடன அரங்கு ஆகியனவும் நடை பெற்றன.

## தெய்வத் தமிழ் மன்றம்

திருவொற்றியூர் தெய்வத்தமிழ் மன்றத்தின் சார்பில் 7.7.85 இல் சென்னை மினர்வா திரை அரங்கில் காலை 9-30 மணியளவில் உயர் நிரு. சரத்தண்டேகர் அவர்கள் தலைமையிலும், டாக்டர் வி. எஸ். நாகராசன் அவர்கள் முன்னிலையிலும், திருக்குறள் நெறி பரப்பு மைய இயக்குநர் திருக்குறளார் வி முனிசாமி அவர்கள் வள்ளுவரும் வள்ளலாரும் என்னும் பொருள் பற்றிச் சிறப்புரை ஆற்றினர். திரு. அண்ணமலை அடிகளார் அனைவரையும் வரவேற்றார்

## வளரும் தமிழ்

(தூய - புதிய திங்கள் இதழ்)

தமிழ் வளர்ச்சி ஒன்றையே குறிக் கோளாகக் கொண்டும், சாதி சமய, கட்சி, இன வேறுபாடுகட்கு அப்பால் நின்றும் வளர்தமிழை வளமுறச் செய்யவும் உலகெலாம் பரவும் வகை காணவும் பன்மொழிப் புலவர் மு. ச. சிவம் க. மு. இலக்-வல். அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவருகின்றது. தமிழ் அன்பர்களும் ஆர்வலர்களும் உறுப்பினர்களாகச் சேர்ந்து வளரும் தமிழுக்கு ஆதரவு தர வேண்டுகிறோம். ஆண்டுக் கையொப்பம் உருபா 24/- வாழ் நாள் கையொப்பம உருபா 250/-

ஆசிரியர் 'வளரும் தமிழ்'

டி• 121 சம்பத் சாலை, ஈரோடு-638011

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் சஉஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாகநம்பி அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| தூத்துக்குடி திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| திரு. K. வேணுகோபால் அவர்கள் மேலாளர் சாந்தி தியேட்டர். சென்னை-2 (தம் அன்னையார் நினைவாக) | 25 | 00 |
| இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பேரவை, சென்னை | 350 | 00 |

# மதிப்புரை

**கவிதை அரங்கேறும் நேரம்**

[கவிஞர் குருவிக்கரம்பை சண்முகம், பாண்டியன் பதிப்பகம், 17, 3வது குறுக்குத்தெரு, கிழக்கு செனாய் நகர், சென்னை-30 ரூ 7/.]

பல புதுக் கருத்துகளின் கருவூலமாகத் திகழ்கின்றது கவிஞர் குருவிக்கரம்பை சண்முகனாரின் இப் புதுக்கவிதைத் தொகுப்பு. ஆங்காங்கே இவர் எடுத்துக்காட்டும் உவமைகள் வியந்து பாராட்டத் தக்கனவாயும், சிந்தனைக்கு வேலை தரும் வகையிலும் அமைந்துள்ளன. "சமுதாயம் என்பது கலவியின் தொடர்கதை," "இலக்கியம் என்பது கல்வியின் தொடர்கதை" என்பதும், 'சிறை' என்னுந்தலைப்பில் கருவறை-கல்லறை-சிறை இம்மூன்றையும் ஒரு புதிராகவே அமைத்திருப்பதும், 'பேசுவதற்கே பிறந்தவர்கள்' என்னுந்தலைப்பில் அரசியல் வாதிகளை அடையாளம் காட்டுவதும், 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்னுந்தலைப்பில் வேண்டாத தீண்டாமையால் நமது சமூகம் மனித நீதியை எப்படியெல்லாம் கறைபடுத்தியுள்ளது என்பதை விளக்கும் பாங்கும், "சாதிநோய் பிடித்த சமுதாயத்தில் மனிதர்கள் பத்தியக்காரர்களாய் மட்டுமல்ல, பைத்தியக்காரர்களாகவும் இருக்கிறார்கள்" என்னும் வரிகள் சாதிப் பித்தர்களுக்கு நன்மருந்தாக அமைந்திருப்பதும், 'குருடாகி விட்டார்கள்' என்னுந்தலைப்பில் வரதட்சிணைக் கொடுமையை வடித்துக் காட்டும் முறையும் கருத்துக் குருடர்களின் கண்களைத் திறக்கச் செய்வனவாகவும் அமைந்துள்ளன. 'வன்முறை எது'? என்பதற்கு இவர்தரும் விளக்கம் நன்முறையில் அமைந்துள்ளது. எனவே, காலம் என்னும் அரங்கில் குருவிக்கரம்பையாரின் கவிதைகள் அரங்கேறும் நேரமிதே.

**மனிதனைத் தீண்டாதான் மனிதனா ?**

[புலவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன், எம். ஏ., வசந்தா பதிப்பகம், 21, தருமராசா கோயில் தெரு, ஆலந்தூர், சென்னை-16, ரூ12-]

வானொலியும் தொலைக்காட்சியும் அடிக்கடி ஒரு கவிஞரின் பெயரைச் சொல்கின்றனவென்றால், அது கவிஞர் ஆலந்தூர் மோகன ரங்கன் என்பதைப் பலரும் அறிவர். சிறப்பாகக் கலையுலக அன்பர்கள் அறிவர். அந்த அளவிற்கு இவருடைய கவிதைகளும், நாடகங்களும் இசைப்பாடல்களும் ஏட்டிலும் நாட்டிலும் சிறந்து விளங்குவன. அரசியலில் அகப்பட்டு உழலாமல், தமக்கென ஒரு தனிப்பாதை அமைத்துக்கொண்டு, இலக்கிய உலகில், அடக்கத்தோடு - அதே நேரத்தில் விறு நடைபோடும் வித்தகர் இவர்.

இப் புத்தகத்தில் இடம் பெற்றுள்ள கவிதைகளுள் ஒன்றுதான் பாடத்திட்டத்தில் இடம் பெறும் பக்குவத்தினைப் பெற்ற "**மனிதனைத் தீண்டாதவன் மனிதனா ?**" என்னும் கவிதை, இத்தொகுப்பில் "முன்னர்

நடப்போம்'' என்னும் தலைப்பில் துவங்கி ''இன்னும் பாடுவேன்'' என்னும் தலைப்போடு முடிக்கும் இவர்தம் உள்ளப்பாங்கு வரவேற்கத் தக்கது. சுவையில்-கருத்தில் கவிதைகள் ஒன்றையொன்று விஞ்சு கின்றன. அதே நேரத்தில் கவிதைகள் அனைத்தும் மரபுக் கவிதை களாய் அமைந்திருப்பதும் பாராட்டத் தக்கது. இவர் இன்னும் பாட வேண்டும் !

### பொற்காலம்

[கவிஞர் வேலூர் ம. நாராயணன், எம். ஏ. நிறைவாணன்பதிப்பகம், தமிழ்ச் சோலை, 57, சர்க்கார் மண்டி வீதி, வேலூர்-4. ரூ. 10/-]

செந்தமிழ்ச் செல்வி, தினகரன், மாலைமுரசு, அரும்பு மற்றும் சில இதழ்களிலும், கவியரங்குகளிலும் இடம் பெற்ற இக் கவிஞரின் கவிதைகளின் தொகுப்பே இந்தப் 'பொற்காலம்'. கவிஞர் நாராயணன் அவர்களின் முற்போக்குக் கருத்துக்களும், பொதுநலம் நாடும் பண்பும் இக் கவிதைகளில் பளிச்சிடுகின்றன. எடுத்துக் காட்டாகச் 'சிறுபிள்ளைத்தனங்கள்,' 'குடிகாரத் தனம்', 'கானல்நீர்' 'குடும்பக்கட்டுப்பாடு, 'சூரியக்கிரகணம்,' 'செத்தும் வாழ்வான் செயவர்த்தனே,' 'வையகத்தின் போக்கே மாறும்,' 'பேரறிவு தேவையில்லை,' 'ஆறேழு ஆண்டுகளாய்' என்னும் கவிதைகளைச் சொல்ல லாம். மற்றக் கவிதைகளும் படித்துச் சுவைக்கத்தக்கனவே.

### குறட் செல்வம்

[தவத்திரு குன்றக்குடி அடிகளார், கலைவாணி புத்தகாலயம் 158, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17, ரூ 12/-]

துறவிகளுள் முற்போக்குக் கருத்துடையவர் ஒருவர் உள்ளனர் என்றால் அவர் தவத்திரு குன்றக்குடி அடிகளாரே என்பது மிகை யாகாது. சமயத்துறையில் சீர்திருத்தமும், பொதுமை நோக்கும் பரவுதல் வேண்டும் என விழைபவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். இத்தகைய சமயப் பெரியார் திருக்குறளைப் பல திருப்பங்களினின்று ஆராய்ந்து எல்லாரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய நல்ல கருத்துகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். குறட் செல்வம் என்னும் இந்நூலில் 42 கட்டுரைகள் உள்ளன. அத்தனையும் பயனுள்ளவை. மாணவர்கள் திருக்குறட் கருத்துகளை வைத்துக் கட்டுரை எழுதவும் மேடைகளில் பேசவும் துணைபுரிய வல்லவை. நல்லதொகுப்பு நூல்.

### குழந்தையும் குருவியும்

[கவிஞர் திருச்சி வாசுதேவன், திருமகள் நூலகம், அயப்பாக்கம், சென்னை. -77 ரூ.3/-]

கவிஞர் திருச்சி வாசுதேவன் அவர்கள் அவ்வப்போது வானொலிகட்கும், சில இதழ்களுக்கும் சிறுவர்கட்காக எழுதிய சுவை யான பாடல்களின் தொகுப்பே இந்நூல். இதில் 30 பாடல்கள் உள்ளன. அவற்றுள் சுவையான கதைபொதி சிறு பாடலான 'குழந்தையும் குருவியும்' என்னும் பாடலே நூலுக்குப் பெயராயிற்று. பாடல்கள் அத்தனையும் சிறுவர் படித்து மகிழத் தக்க வண்ணம் இனிமையும் எளிமையும் உடையவை.

## திருமணங்கள் வெறும் நிகழ்ச்சிகள் அல்ல

[ஏர்வாடி. எஸ். இராதா கிருஷ்ணன், சுதா பதிப்பகம், 4, முத்து முதலித் தெரு, புரசவாக்கம், சென்னை-7, ரூ.10/-]

படித்தற்கு மட்டுமன்றி நடித்தற்கும் ஏற்ற நல்ல நாடகங்களையும் படித்துச் சுவைக்கத் தக்க சிறு கதைகளையும் எழுதும் ஆற்றல் பெற்றவர் ஏர்வாடி. எஸ். இராதா கிருஷ்ணன். இப் புத்தகத்தில் 14 சிறுகதைகள் உள்ளன. முதல் கதையான "திருமணங்கள் வெறும் நிகழ்ச்சிகள் அல்ல" என்னும் கதையில் அரசியல் வாதிகளைக் கதை உறுப்பினர்களாகச் சித்திரித்திருப்பது, நம் சமுகாயத்தில் எப்படி மக்கள் பழைமைக்கும் சீர்திருத்தத்திற்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு இரட்டை வாழ்க்கை வாழ்கிறார்கள் என்பதைத் துணிவோடு சுட்டிக் காட்டும் திறம் பாராட்டத்தக்கது. "அவள் வித்தியாச மானவள்" என்னும் கதை காதலின் வலிமையினைச் சித்திரிப்பதோடு பெரிய புராணத்தில் வரும் திலகவதியார் வாழ்க்கையினை நினைவூட்டுகிறது. மற்றக் கதைகளும் படித்து இன்புறத் தக்கவை

## பணம்...பணம்...பணம்...

ஏர்வாடி. எஸ். இராதா கிருஷ்ணன். சுதா பதிப்பகம், 4 முத்து முதலித் தெரு, சென்னை-7, ரூ 15/-

வாழ்க்கையைச் சித்திரிக்கும் ஐந்து நாடகங்களின் தொகுப்பு இந் நூல். வானொலி, தொலைக் காட்சி ஆகியவற்றின் மூலம் புகழ் பெற்ற நாடக ஆசிரியர் ஏர்வாடி இராதாகிருஷ்ணன் எழுதியஇந் நாடகங்கள் படித்தற்கும் நடித்துக் காண்பதற்கும் ஏற்ற சுவையான நாடகங்கள்.

## வசந்தம் வருகிறது

[ஏர்வாடி எஸ். இராதா கிருஷ்ணன். சுதா பதிப்பகம், 4 முத்து முதலித் தெரு, புரசவாக்கம், சென்னை-7 ரூ 8/-]

ஏர்வாடி இராதா கிருஷ்ணன் அவர்கள் முத்தமிழில் தொட்ட தெல்லாம் இனிக்கும் வகையில் எழுதும் ஆற்றல் பெற்றவர். ஏறத்தாழ 100 கவிதைகளின் தொகுப்பாகிய 'வசந்தம் வருகிறது' என்னும் இக் கவிதைத் தொகுப்பு உண்மையிலேயே வசந்தமாக இனிக்கிறது. ஏற்றமிக்கது எது என்று சொல்ல முடியாத அளவில் எல்லாக் கவிதைகளும் ஒன்றையொன்று போட்டி போட்டுக் கொண்டு சுவையூட்டுகின்றன. பதிப்பு முறையும் பாராட்டத்தக்கது.

## கன்பூசியசும் திருவள்ளுவரும் கண்ட கல்வி

[டாக்டர் கு. மோகனராசு, வள்ளுவர் கழகம். 69, வேங்கடரங்கம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005, ரூ 12/]-

சீன மண்ணில் தோன்றிய கன்பூசியசும், தமிழ் மண்ணில் தோன்றிய வள்ளுவரும் தத்தம் சிந்தனைச் சிதறல்களாக வெளியிட்டிருக்கும் சீரிய கருத்துகளின் ஒப்பாய்வே இந்நூல்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தமிழ் வளம்—தமிழகப் புலவர் குழு | 20 | 00 |
| பாவாணர் கடிதங்கள்—கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் | 15 | 00 |
| விருத்தப்பாவியல் | 10 | 00 |
| 100 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலி மாவட்டம் —ச. சுந்தரராசன், நெல்லை | 25 | 00 |
| இன்பவல்லி (இலக்கிய நாடகம்) —கவிஞர் சி. து. கன்னிசாமி | 14 | 00 |
| மின் உற்பத்தியில் பன்முறைகள் —எஸ். சுந்தர சீனிவாசன், பி.இ., டி. எல். எல். | 6 | 00 |
| குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்கள் | 25 | 00 |
| கலைவளர்த்த திருக்கோயில்கள்—டாக்டர் இரா. கலைக்கோவன் | 15 | 00 |
| சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம் —நாவலர் ந. மு. வே. நாட்டார் உரை | 25 | 00 |
| அறிவியல் களஞ்சியம்—இராம் குமார் | 7 | 00 |
| அறிவியல் கொத்து " | 7 | 00 |
| அறிவியல் பூங்கா " | 7 | 00 |
| பட்டதெல்லாம் போதும்—சிறுகதைத் தொகுப்பு | 10 | 00 |

## தமிழ்ப் பல்கலைக் கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| Tamil Literature —Prof. M. S. Purnalingam Pillai | 85 | 00 |
| | U. S S. | 15 |
| மொழி நூல்—மாகறல் கார்த்திகேய முதலியார் | 75 | 00 |
| Tamil University Machine Translation System (TUMTS) Co-Authers: K. C. Chellamuthu K. Rangan K Murugesan | 75 | 00 |
| | U. S. S. | 15 |
| A Study on the Thanjavur Art Plate —Prof. P. Saravanavel | 60 | 00 |
| | U. S S. | 12 |
| நாமதீப நிகண்டு —கல்லிடை நகர் சிவசுப்பிரமணியக் கவிராயர் | 68 | 00 |
| மொழி நூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும் —பேரா. கா. சுப்பிரமணிய பிள்ளை | 45 | 00 |
| Indians in South Africa —Prof. K. Nambi Arooran | 60 | 00 |
| | U. S. S. | 12 |

நூல்கட்குக் கழிவு 25%—அஞ்சற் செலவு தனி. பணவிடை மூலம் அல்லது வரைவோலை மூலம் கட்டணங்கள் அனுப்பலாம்.

விவரங்களுக்கு:

பதிப்புத்துறை இயக்குநர்,

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613 001.

---

## "செந்தமிழ்ச் செல்வி"

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |